R.gd. No 2975

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் - 339

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

# SRI RAMANUJAN

Editor:
*Mahamahimopadhyaya*
P. B. ANNANGARACHARYA, KANCHIPURAM-631503.

வருஷச் சந்தா 10 ரூ. ஜீவியச் சந்தா ரூ. [illegible]

பேரருளாளன் பெருந்தேவித்தாயார்
திருவடிகளே சரணம்.



ஸ்ரீ யதிவரம்பெருமானார் ஜீயர்
திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி* ஏழ்பாரும்
உய்ய அவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1976 செப்டம்பர். ஆவணி

# நிர்வேதச் செய்தி

## *சித்ரகூடம் வித்வன்மணியின் வைகுண்டவாஸம்.*

தில்லைத் திருச்சித்திரகூடத்தில் எழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபய வேதாந்த வித்வன்மணியான அஷ்டகோத்ரம் வேங்கடாசார்யஸ்வாமி நேற்று ஆடிமீ 31வ ஞாயிற்றுக்கிழமையன்றிரவு திருநாடலங்கரித்த நிர்வேதச்செய்தியை உலகமெல்லாம் அறிந்து வருந்தினபிறகு நாம் தெரிவிக்க நேர்ந்தது பற்றி வருந்துகிறோம். சென்றமாதத்து ஸ்ரீராமாநுஜன் வெளியானபிறகு ஸ்வாமி பரமபதித்தருளினதே இந்தத்தாமதத்திற்குக் காரணம். ஸ்வாமி சிலமாதங்களாகவே திருமேனி டாங்கில்லாமல் சயனித்திருந்தார். ப்ராசீந வித்வான்களென்று ப்ரஸித்தி பெற்றவர்களில் ஸ்வாமியே சேஷித்திருந்தார். இன்னும் பத்தெட்டு வருஷங்கள் எழுந்தருளியிருக்கலாம். இவ்விபூதியின் தௌர்ப்பாக்யம் சோசநீயம். ஸ்வாமியின் கநிஷ்ட திருக்குமாரரான ஸ்ரீமான் (மஹாமேதாவி) ரங்காசாரியர் அடியேனுக்கெழுதியிருந்த பத்திரிகையை இதன்கீழ்ப் பிரசுரித்து அடியேன் ஒருவாறு மனச்சாந்தி பெறுகிறேன்.

—பத்திராதிபர் *P. B. A.*

"ஸ்ரீ உ. வே. திருச்சித்ரகூடத்து அப்பனுர் பரமபதித்த அன்று பந்துக்கள் அனைவரும் அருகிலேயே இருந்தோம். கடைசிவரை ஞாபகத்துடன் திருக்கண்ணால் கடாக்ஷித்துக்கொண்டிருந்தார். பரமபதிக்க 48 மணிநேரம் முன்பே சுவாசத் தடை ஏற்பட்டு ப்ராணவாயு கொடுக்கப்பட்டது. அதனால் (ஆடிமீ 30வ) சனி இரவு முதல் கோயில் திருவாய்மொழி, இராமாநுச நூற்றந்தாதி உபதேச ரத்தினமாலை, ஆர்த்திப்ரபந்தம், அர்ச்சிராதி, ஆனந்தவல்லி, ப்ருகுவல்லி இவை ஸேவிக்கப்பட்டன. அருகிலிருந்த திவ்யதேசங்களிலிருந்து ஸ்வாமிகளும் அந்வயித்தார்கள். ஞாயிறு இரவு 6–50 மணிக்கு ஸ்வாமி பரமபதித்தார். திங்கள் விடியற்காலையே சரமக்ரியைகள் தொடங்கப்பட்டன. ஆளவந்தார் படியான சரம கார்யங்களும், ப்ரம்மமேத ஸம்ஸ்காரமும் விதிப்படி நடந்தன. புஷ்கரிணியிலிருந்து வேதபாராயணத்துடன் தீர்த்தம் எடுத்துவரப்பட்டு ஸ்ரீ ப்ரச்நஸம்ஹிதையில் கூறியுள்ளபடி ஸப்ததச, நவ கலச ஸ்நாநங்களும் திருமஞ்சனமும் நடக்கும்போது நீராட்டம் ஸேவிக்கப்பட்டது. பிறகு திருமண்காப்பின்போது ஆளவந்தார் ஸ்தோத்ரமும், திருப்பல்லாண்டு, திருப்பாவை, கண்ணிநுண் சிறுத்தாம்பு, சூழ்விசும்பணிமுகில் ஆகியவை ஸேவித்து பின்பு வீதியில் திருவிருத்தம் ஸேவித்து திவ்யதேச மாலை ப்ரஸாதங்கள் எழுந்தருளப்பண்ணி அகத்து வாசலில் சாற்றுமுறை நடந்து விதிப்படி ப்ரம்மமேத ஸம்ஸ்காரம் நடைபெற்றது. ஐம்பதுக்கு மேற்பட்ட அருகிலுள்ள திவ்யதேச ஸ்வாமிகள் கோஷ்டியில் கலந்துகொண்டனர். ஏராளமானவர் ஸ்ரீ ஸ்வாமிக்கு மாலைகளும் பொன் ஆடைகளும் ஸமர்ப்பித்தனர். ஸ்ரீ நடராஜா ஆலய சாரிடியும் சாதராவும், மாலைகளும் இட்டு மரியாதையைத் தெரிவித்தது. முறையே ஸபிண்டீகரணாந்தம் நடைபெற்றபின், திருவத்யயன கோஷ்டி விலக்ஷணமாக நடைபெற்றது. நூறு ஸ்வாமிகள் உபய கோஷ்டியிலும் அந்வயித்தனர். கோயில், திருமலை, ஸ்ரீபெரும்பூதூர், திருவாலி திருநகரி, திருநாங்கூர்ப்பதிகள், தாடாளன் கோயில், தேரழுந்தூர், காட்டுமன்னார் ஸந்நிதி, ஸ்ரீமுஷ்ணம், திருக்குடந்தை, நாதன் கோயில் முதலான திவ்யதேசங்களிலிருந்து பரிவட்டம் மாலை ப்ரஸாதங்கள் வழங்கப்பட்டன. தேவரீர் அநுக்ரஹித்திருந்த நிர்வேத பஞ்சகம் வாசித்தளிக்கப்பட்டது. மாலை நகரவாஸிகளின் இரங்கற் பொதுக்கூட்டம் கூடி, நகரின் பல ப்ரமுகர்கள் ஸ்வாமியின் அநுகுணங்களைப்பற்றி பேசினர்கள். ஸ்ரீ. உ. வே. ஸ்ரீபெரும்பூதூர் கற்பூரம் பட்டப்பா ஸ்வாமி எல்லாக் கைங்கரியங்களையும் க்ரமப்படி நடத்திவைத்தது விசேஷித்துக் குறிப்பிடத்தக்கது"

திருச்சித்ரகூடம், }
28—8—76.

இப்படிக்கு, A. V. ரங்காசாரி.

# ஸ்ரீ ராமாநுஜன்—339



ஆசிரியர்:
மஹாமஹிமோபாத்யாய ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர்

ஸம்புடம் 29 | நளஹு ஆவணி மாதம் 10—9—76 | ஸஞ்சிகை 3

## மேல்வரும் பிங்கள வருஷத்தோடு நிகழும் நள வருஷத்தையும் கூட்டிக்கொண்மின்

**பிங்களவருஷம் பெரும்பூதூர் மாமுனிவனவதாரத்தினுல் பெருமைபெற்றது. நளவருஷம் சூடிக்கொடுத்த சுடர்க்கொடியினவதாரத்தினுலும் திருமங்கைமன்னன் திருவவதாரத்தினுலும் பெருமைபெற்றது.**

ஸ்ரீவைஷ்ணவப் பேராசிரியர்காள்! இதுகாறும் நாம் பிங்கள வருஷத்தின் பெருமையை மட்டுமே பிரசாரம் செய்து வந்தோம். நிகழும் நள வத்ஸரத்தில் ஆண்டாளுடைய திருவவதாரமென்பதைச்சென்ற ஆடி மாதத்தில் அறியப்பெற்ருேம். அப்போதே நாம் **அபிநவ கோதாஸ்துதி** யென்றும், **கோதாதேவ்யம்ருதத்வநி** யென்றும் ஆண்டாள் விஷயமான இரண்டு ஸ்துதி நூல்களை (வடமொழியில்) இயற்றி அவ்விரண்டையும் தமிழுரையுடன் ஸ்ரீராமாநுஜன் (363B) என்னுமிதழில் வெளியிட்டுப் பிரசுரித்தோம். அன்றியும், அவற்றை ஹிந்தீ டீகையுடன் நமது வைதிக மநோஹரா வென்னும் ஸம்ஸ்க்ருத பத்ரிகையிலும் பிரசுரித்தோம். இவ்விரண்டு ஸஞ்சிகைகளையும் லபிக்கப் பெருதவர்கள் (25 ந-பைஸா ஸ்டாம்புடன்) நமக்குத் தெரிவித்துக்கொண்டால் உடனே அனுப்புவோம்.



இந்த நள வருஷத்திலேயே திருமங்கையாழ்வாருடையவும் திருவவதாரமென்பதை நாம் மறந்திருந்தோம். ஸமீப காலத்தில் சில பெரியார்கள் நினைவூட்ட வுணர்ந்து மகிழ்ந்தோம். அதற்காகத் தற்காலம் நாம்செய்த பணிகள் இரண்டு. (1) திருமங்கையாழ்வார் அருளிச்செய்தவையாய் இயற்பா ஆயிரத்தில் சேர்ந்தவையான திருவெழுகூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல் என்னும் மூன்று திவ்வியப் பிரபந்தங்களுக்கு நம்முடைய திவ்யார்த்த தீபிகையுரை நாலைந்து வருடங்களாய் துர்லபமா யிருப்பதால் அதை மறுபதிப்புச் செய்து முடித்தோம். (2.) ஷை திவ்யப்பிரபந்தங்கள் மூன்றுக்கும் ஸம்ஸ்க்ருத மொழிபெயர்ப்பு= (அதாவது) திருவெழுகூற்றிருக்கையை ஒரு தண்டகமாக இயற்றியும், திருமடல்களிரண்டையும் ஆர்யாவ்ருத்தத்தில் ச்லோகபத்தமாக்கியும் விரிவான டீகையோடு பல வருஷங்களுக்கு முன்பு வெளியிட்டிருந்தோம், அவையும் சிலவாண்டுகளாக துர்லபமானதனால் அவற்றையும் தேவநாகர லிபியில் அச்சிடுவித்து நமது வைதிக மநோஹரா பத்ரிகையில் இம்மாதத்து இதழில் ப்ரசுரம் செய்திருக்கிறோம். இவ்வளவால் திருப்தி யடைந்திலோம், மேலும் பணி புரிவதற்கு *மநோரதாநாம் அதடா: ப்ரவாஹா:. க்ரமேண வெளிவரும். ... ... *

---

 பிங்களவத்ஸர மங்களமாலிகை 

## ஸ்ரீபாஷ்யத்தில் ஓர் அதிகரணம்

## ப்ரயோஜநவத்த்வாதிகரணம்

— (சாரீரகமீமாம்ஸையில் இரண்டாமத்யாயம் முதற்பாதத்திலுள்ளது) —

பரமபுருஷன் ஜகத்தைப் படைக்க சக்தன் என்பதில் விவாதமில்லை. ஆனால் ஜகத் ஸ்ருஷ்டியினால் அவனுக்கு யாதொரு ப்ரயோஜனமும் ஸித்திக்கமாட்டாதாகையாலே அவனை ஸ்ருஷ்டி கர்த்தாவாக ஒப்புக்கொள்ள ஔசித்யமில்லை. உலகத்தில் 'ப்ரயோஜந மநுத்திச்ய ந மந்தோபி ப்ரவர்த்ததே' என்கிற வசனம் அனைவருமறிந்தது. ஒரு ப்ரயோஜனத்தைக் கணிசியாமல் மூடன்கூட ஒரு காரியத்தில் கைவைக்கமாட்டானென்பது இதன் பொருள். ஆகவே பரமபுருஷனை ஜகத்ஸ்ரஷ்டாவாக இசைந்தால் அவன் ஒரு ப்ரயோஜனத்தைக் கருதி ஸ்ருஷ்டியில் ப்ரவர்த்திக்கிறானென்று கூறவேண்டும். அவனோ அவாப்த ஸமஸ்த காமனென்று ப்ரஸித்தி பெற்றவன்; ஜகத்ஸ்ருஷ்டியினால் அவன் பெறலாவதொரு ப்ரயோஜனமுள்ளதாக நிரூபிக்க முடியாது. ஏதேனுமொரு ப்ரயோஜனத்தைச் சொன்னால் அவனுக்கு அது முன்னேயில்லையென்று கொள்ளவேண்டி வருமாகையாலே அவனுக்கு இயற்கையாகவுள்ளதான அவாப்த ஸமஸ்த காமத்வ ப்ரஸித்திக்கு பங்கம் வரும். உலகத்தில் அவரவர்கள் செய்யுங்காரியங்களுக்கு ஸ்வார்த்த ப்ரயோஜனமேயுள்ளதென்கிற நிர்ப்பந்தமில்லாமையாலும், பரார்த்தமாகவும் காரியங்கள் செய்வதுண்டாகையினாலும் இங்கு பர ப்ரயோஜனத்திற்காக ஸ்ருஷ்டியென்று சொல்லவும் போகாது. அவாப்த ஸமஸ்த காமனானவன் பரார்த்தமாகச் செய்கிறானென்றால் பிறரை அநுக்ரஹிக்க வேண்டிச் செய்வதாக இருக்கவேணும். பல

வகைத் துன்பங்களை யனுபவிப்பதற்கு ஆஸ்பதமாகக் காணப்படுகிற ஸ்ருஷ்டியை அநுக்ரஹ கார்யமாக எண்ணுவதற்கில்லையே. துக்கம் கலசாமல் ஆனந்தமே அநுபவிப்பதாக ஜகத்து காணப்படுமாகில் பரமகாருணிகனான ஈச்வரன் கருணை யினால் ஸ்ருஷ்டித்தானென்று சொல்ல ஏற்கும். அப்படியில்லையே. ஆகவே ஈச்வரன் ஜகத்காரண பூதனல்லன் என்று பூர்வபக்ஷம் தோன்ற, அதன் பரிஹாரார்த்தமாக இவ்வதிகரணம் அவதரிக்கின்றது.

ஸூ. *ந ப்ரயோஜநவத்த்வாத்*. (2—1—32.)

இது பூர்வபக்ஷஸூத்ரம். (இதன் பொருளாவது)—ப்ரயோஜநவத்த்வாத்– செய்கிற காரியம் ஒரு ப்ரயோஜனத்தை யுடைத்தாயிருக்கவேண்டுமாகையாலே, [ப்ரக்ருதத்தில் ஸ்ருஷ்டியில் பரமபுருஷனுக்கு ஒரு ப்ரயோஜனமும் சொல்ல முடியாதாகையாலே] ந—ஈச்வரன் ஜகத்காரண பூதனல்லன் என்கை. இதற்கு மேல் ஸித்தாந்த ஸூத்ரம் வருமாறு;—

ஸூ. *லோகவத்து லீலாகைவல்யம்.* (2—1—33)

ஜகத்ஸ்ருஷ்டிக்கு லீலையே ப்ரயோஜனமென்று ஸமாதானம் காட்டப்படு கிறது. உலகில் ஸார்வபௌமனானவொரு சக்ரவர்த்தியை யெடுத்துக்கொள் வோம். அவன் அவாப்தஸமஸ்தகாமனென்னக் குறையில்லை. அவன் சில தோழ ரோடு கூடிப் பந்துவிளையாட்டு முதலான லீலைகளைச் செய்யக் காணுநின்றோம். அதனால் அவனுக்கொரு ப்ரயோஜனமுமில்லையென்பது ப்ரத்யக்ஷம். ஆயினும் லீலையாக நடந்துவருகிறது. அதேபோல, பகவானும் லீலையாகவே ஜகத்ஸ்ருஷ்டி பண்ணிப் போருகிறான் என்றதாயிற்று. ஸூத்ரத்தில் லோகவத் என்பதற்குப் பொருள் 'லோகத்திற்போல' என்பதாம். "யதா லோகே ராஜ்ஞ: சந்துகாத்யாரம்பே" என்பது வேதாந்த தீபஸூக்தி. லீலாகைவல்யம்-லீலைமட்டும் என்றபடி.

## — இவ்விடத்தில் மணவாளமாமுனிகளின் அற்புதமான விமர்சம் —

பிள்ளை லோகாசார்யர் தத்வத்ரயத்தில் ஈச்வரப்ரகரணத்தில் இவ் விஷயத்தை யருளிச்செய்யுமிடத்து 'இதுக்கு ப்ரயோஜனம் கேவலலீலை' என்றருளிச் செய்தார். அதற்கு வியாக்கியானம்—"அவாப்தஸமஸ்த காமதயா பரிபூர்ணனா யிருக்கிறவனுக்கு இந்தவ்யாபாரத்தால் ப்ரயோஜனமென்னென்ன அருளிச்செய் கிறார் (இதுக்கு ப்ரயோஜனம் கேவல லீலை) என்று. அதாவது, இந்த ஜகத்ஸ்ருஷ்டி ரூபவ்யாபாரத்துக்கு ப்ரயோஜனம் வெறும் லீலையென்றபடி." என்றருளிச்செய்து விட்டு; 'ஸ்ருஷ்டி லீலாரூபம்' என்று வாக்யப்ரயோகம் பண்ணலாமே யொழிய 'ஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜனம் லீலை' என ப்ரயோகம் பண்ணுவது சாஸ்த்ரீயமாகுமா வென்று விமர்சித்தருளுகிறார் மாமுனிகள். "ஜகத்ஸர்க்கே லீலைவ ப்ரயோஜநம்" என்றுள்ள பகவத்பாஷ்யகார ஸ்ரீஸூக்தியின்மேலும் இந்த விமர்சம் ப்ராப்தமா கிறது. இங்கு மாமுனிகளின் ஸ்ரீஸூக்தி வருமாறு—"லீலையாவது தாதாத்விகரஸமொழிய காலாந்தரத்தில் வருவதொரு பலத்தைக் கணிசியாமல் பண்ணும் வ்யாபாரமேயாகிலும் (இதுக்கு ப்ரயோஜநம்) என்று ஸ்ருஷ்டி ரூபவ்யாபாரத்துக்கு ப்ரயோஜனமாகச் சொல்லுகையாலே தாதாத்விக ரஸமாத்ரத்தைச் சொல்லிற் றாகக் கடவது" என்பதாம். இந்த பங்க்திகள் சாஸ்த்ரவ்யுத்பன்னர்களுக்கொழிய

அர்த்தபோதகமாக மாட்டாமையாலே சிறிது விவரிக்கவேண்டியதாகிறது. லீலை யாவது–பின்னிட்டு வருவதொரு பலனைக் கோலாமல் தற்காலத்தில் விளைவதொரு இன்பத்தைமட்டும் விரும்பிச்செய்யும் வியாபாரம். ஸ்ருஷ்டியாகிற வியாபாரத்திற்கு லீலை யாகிற வியாபாரம் ப்ரயோஜனமென்றால் இது அந்வயிக்க மாட்டாது. இதைப் பொருந்த வைக்கவேணும். மணவாளமாமுனிகள் பொருந்தவைக்கும் வழி கேண்மின். லீலையாவது—தற்காலத்தில் விளைவதொரு இன்பத்தை விரும்பிச் செய்யும் வியாபாரம் என்பது உண்மையேயாயினும், ப்ரக்ருதத்தில் 'தற்காலத்தில் விளைவதொரு இன்பம்' என்றிவ்வளவே லீலாசப்தார்த்தமாகக் கொள்ளப்படவேண்டும். வ்யாபார பர்யந்தமாகப் பொருள் கொண்டால் தான் 'வ்யாபாரத்துக்கு வ்யாபாரம் ப்ரயோஜனம்' என்று சொல்லுகையால் வரும் அநுபபத்தி இடம் பெறும். இப்போது வ்யாபாரபர்யந்தமாகக் கொள்ளாமல் லீலையாவது தற்காலத்தில் விளைவதோர் இன்பம் என்னுமளவே பொருளாகக் கொள்ளப்படுவதால் 'ஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜனம் தாத்காலிக ரஸம்' என்றதாகி வாக்யப்ரயோகம் பொருந்திவிடுகிறது–என்பது மாமுனிகளின் உபபாதனப்ரகாரம். 'த்வதாச்ரிதாநாம் ஜகதுத்பவஸ்திதிப்ரணாச ஸம்ஸார விமோசநாதய: பவந்தி லீலா.' என்ற ஆளவந்தார் ஸ்ரீஸூக்தியிலும், 'அகிலபுவநஜன்மஸ்தேம பங்காதி லீலே' என்ற ஸ்ரீபாஷ்ய மங்கல ச்லோகத்திலும் அநுபபத்திசங்கைக்கு ப்ரஸக்தியே யில்லை யென்று தெளிக. (இடையில் இது ப்ராஸங்கிகம்.)

சப்த ப்ரயோகத்தில் அநுபபத்தி சங்கா ஸமாதானங்கள் இங்ஙனே நிகழ்ந்திருப்பது தவிர, லீலாகைவல்ய மென்ற அர்த்தத்திலும் மணவாளமாமுனிகள் (தத்வத்ரய வியாக்கியானத்திலேயே அவ்விடத்திலேயே) ஓர் அநுபபத்தியை சங்கித்துப் பரிஹாரமு முணர்த்தியருளியுள்ளபடியைக் கேளீர். அவ்விடத்து ஸ்ரீஸூக்திகளின் தாத்பரியத்தை மட்டும் இங்கு விளக்குகிறோம்; பரமபோக்யங்களான ஸ்ரீஸூக்திகளை அங்கே ஸேவிப்பது.

ஸர்வேச்வரன் ஜகத்வ்யாபாரத்தை லீலையாக நடத்திப் போருகிறானென்பதை ஸூத்ரகாரர் மட்டுமன்றிக்கே மற்றும் மஹர்ஷிகளும் "க்ரீடதோ பாலகஸ்யேவ சேஷ்டாம் தஸ்ய நிசாமய" இத்யாதிகளாலே வெளியிட்டுள்ளார்கள். ஆழ்வார்களும் "இன்புறுமிவ்விளையாட்டுடையான்." இத்யாதி யருளிச்செய்தார்கள். ஆகவே லீலையென்பது மறுக்கத்தக்கதன்றாகிலும், "விசித்ரா தேஹஸம்பத்திரீச்வராய நிவேதிதும், பூர்வமேவ க்ருதா ப்ரஹ்மந்! ஹஸ்தபாதாதி ஸம்யுதா." என்றும் (திருவாய்மொழி 3-9-10) "சென்று சென்றாலுங் கண்டு சன்மங்கழிப்பானெண்ணி ஒன்றி யொன்றியுலகம் படைத்தான்" என்றும் சேதனர்களுடைய உஜ்ஜீவனம் ப்ரயோஜனமாக ஜகத் ஸ்ருஷ்டிபண்ணினானென்று சொல்லுகிற இவ்வசனங்களுக்கும் சேர நிர்வஹிக்கவேணுமே யென்னில்; நிர்வஹிக்கக் குறையில்லை. சேதனோஜ்ஜீவனமும் லீலையுமாகிற இரண்டும் ப்ரயோஜநமா யிருக்கச்செய்தேயும் ப்ராசுர்யத்தைப்பற்ற லீலையைச் சொல்லிற்று. அதாவது "ஸ்வாதந்த்ர்யமைச்வரமபர்யநுயோஜ்ய மாஹு:" என்கிற ஆழ்வானுடைய ஸ்ரீஸூக்தியின்படி ஸர்வேச்வரனே நினைத்தபடி செய்யவல்ல சக்திமான். ஸகலாத்மாக்களையும் ஏக காலத்திலே முக்தராக்கவல்ல சக்திமான். அப்படியிருந்தும் தானிட்ட வழக்கான ஆத்மாக்களை

கர்மத்தை வ்யாஜீகரித்துக் கைகழியவிட்டு சாஸ்த்ர மர்யாதையிலே காலக்ரமேண அங்கீகரிப்பதாக ஒரு கட்டளையிட்டு வைத்திருப்பதுண்டே. இது வொரு லீலாரஸம் கொண்டாடுவதற்கே யன்றோ; இவ்விபூதிக்கு லீலாவிபூதியென்ற திருநாமமன்றோ. ஆக இவ்விபூதியில் லீலையே ப்ரசுர ப்ரயோஜநமாய்ச் செல்லுகையாலே ஸூத்ர காராதிகளும் ஸ்ருஷ்டிப்ரயோஜனம் லீலையேயாகச் சொன்னதில் குறையொன்று மில்லையாயிற்று. ப்ராஸங்கிகமான விது நிற்க.

இனி அடுத்த ஸூத்ரத்திற்குச் செல்வோம். ஜகத்துக்களைப் படைப்பவன் ஈச்வரனே யென்று 'கொள்ளுமளவில், அவனே பக்ஷபாதியென்றும் கருணையற்றவ னென்றும் சொல்லவேண்டியதாகிறது. ஏனென்னில்; ஸ்ருஷ்டிக்கிறவளவில் ஸகலாத்மாக்களையும் ஒருபடியாகவல்லாமல் தேவமநுஷ்யாதி பேதங்களையிட் டிருப்பதும், சிலரை மூடர்களாகவும், சிலரைப் பண்டிதர்களாகவும், சிலரை ஸுகமே அநுபவிப்பவர்களாகவும், சிலரை துக்கமே அநுபவிப்பவர்களாகவும் படைக்க இங்ஙனே பலவாறு விஷம ஸ்ருஷ்டி காண்கையாலே ஸர்வேச்வரனுக்கு இது அவத்யமாகுமன்றோ? ஸர்வஸமனென்றும் பரம தயாளுவென்றும் ப்ரஸித்தி பெற்றிருக்கிற அப்பெருமானுக்கு எல்லாரளவிலும் ஒத்திராமையாகிற வைஷம்ய மும், து:கிகளாக ஸ்ருஷ்டிக்கையாலே பரதுக்காஸஹிஷ்ணுத்வமாகிற க்ருபை யில்லாமையும் வாராதோ வென்கிற சங்கை தோன்ற, அதற்குப் பரிஹார முணர்த்துகிறது மேல் ஸூத்ரம்.

ஸூ. வைஷம்ய நைர்க்ருண்யே ந ஸாபேக்ஷத்வாத் ததா ஹி தர்சயதி. (2-1-34)

பூர்வபக்ஷமும் ஸித்தாந்தமும் சேர்ந்த ஸூத்ரமிது. வைஷம்ய நைர்க்ருண்யே ந=வைஷம்யமும் நிர்தயத்வமுமாகிற அவத்யங்கள் ஸம்பவிக்கமாட்டா. (ஏனென்னில்;) ஸாபேக்ஷத்வாத்-அவரவர்களின் புண்யபாப ரூபகருமங்களை யெதிர்பார்த்து விஷமஸ்ருஷ்டி நடப்பதனாலே. ததா ஹி தர்சயதி—ச்ருதிஸ்ம்ருதி முதலான ப்ரமாண ஜாலம் இவ்வர்த்தத்தைக் காட்டுகின்றதன்றோ, "ஸாதுகாரீ ஸாதுர் பவதி, பாபகாரீ பாபோ பவதி. புண்ய: புண்யேந கர்மணா பவதி பாப: பாபேந கர்மணா" இத்யாதி ச்ருதிகளும், "நிமித்தமாத்ரமேவாஸௌ ஸ்ருஜ்யாநாம் ஸர்க கர்மணி. ப்ரதாநகாரணீபூதா யதோ வை ஸ்ருஜ்யசக்தய:. நிமித்த மாத்ரம் முக்த்வைவ நாந்யத் கிஞ்சிதபேக்ஷதே, நீயதே தபதாம் ச்ரேஷ்ட! ஸ்வசக்த்யா வஸ்து வஸ்துதாம்" என்கிற ஸ்ரீ விஷ்ணுபுராண வசனங்களும் இங்கு நோக்கத்தக்கன. ஸ்வசக்த்யா வஸ்துதாம் நீயதே — ஸ்வகர்மங்களினாலேயே தேவாதிவஸ்துத்வ ப்ராப்தி யென்றபடி.

இதற்குமேலும் ஒரு ஆசங்கை தோன்றுகிறது; ஸ்ருஷ்டிக்கு முன்னே க்ஷேத்ரஜ்ஞர்கள் கிடையாது. ஏனெனில், "ஸதேவ ஸோம்ய! இதமக்ர ஆஸீத்" இத்யாதி ச்ருதியில்-ப்ரளயதசையில் க்ஷேத்ரஜ்ஞர்களுக்கு பரப்ரஹ்மத்தோடு ஐக்யம் தெரிவிக்கப்படுகையாலே. எப்போது க்ஷேத்ரஜ்ஞர்களில்லையோ அப்போது அவர்களின் கருமமும் இருக்கப்ரஸக்தியில்லை'. ஆகவே விஷமஸ்ருஷ்டிக்குக்

காரணம் க்ஷேத்ரஜ்ஞர்களின் கருமங்கள் என்று எங்ஙனே சொல்லலாம்? என்று சங்கிக்க இடமுள்ளது. இதற்கு ஸமாதானம் சொல்லுகிறது அடுத்த ஸூத்ரம்.

ஸூ. ந கர்மாவிபாகாதிதிசேந்ந அநாதித்வாத் உபபத்யதேசாபி உபலப்யதே ச. (2—1—35)

ஸ்ருஷ்டி காலத்தில் ஜீவாத்மாக்கள் புதிதாக ஸ்ருஷ்டிக்கப்படுவதில்லை. *ந ஜாயதே ம்ரியதே வா விபச்சித்* *ப்ரக்ருதிம புருஷஞ்சைவ வித்த்யநாதீ உபாவபி* இத்யாதி ப்ரமாணங்களினால் க்ஷேத்ரஜ்ஞர்களின் அநாதித்வம் அறிவிக்கப்படுகிறது. அதனால் கர்மப்ரவாஹமும் அநாதியென்பது ஸித்தம். அப்படியில்லையானால் ஒருவர் செய்த கருமத்தின் பலனை யனுபவிப்பது அவர்க்கு இல்லாமற்போகவும், தான் செய்யாத கருமத்தைத் தான் அநுபவிக்கவும் ப்ரஸங்கிக்கும். *ஸூர்யா சந்த்ரமஸௌ தாதா யதாபூர்வமகல்பயத்* என்றச்ருதியை ஊன்றி நோக்கவேணும். இதில் 'யதாபூர்வம்' என்றிருக்கையாலே நவீன ஸ்ருஷ்டி எதுவும் கிடையாதென்பது எளிதாக விளங்கும். ப்ரலய காலத்தில் பரப்ரஹ்மத்தோடு ஐக்யம் சொல்லப்படுகிறதே, அதற்கு என்ன கதியென்னில்; நாமரூபவிபாகத்திற்கு அர்ஹமன்றிக்கேயிருந்த நிலையைக் கொண்டு அங்ஙனே சொல்லிற்றத்தனை. பிறகு நாமரூப வ்யாகரணம் சொல்லப்படுகையாலே ஸ்வரூபம் அநாதியென்பது ஸித்தித்தே தீரும்.

ஆக, பரப்ரஹ்மத்தின் ஜகத்காரணத்வம் அசைக்கமுடியாததென்றும் ப்ரதானபரமாண்வாதிகளுக்கு அது அஸம்பாவிதமென்றும் தலைக்கட்டப்பட்டது.

---

## வேதார்த்த ஸங்க்ரஹமும் - வேத தாத்பர்யமும்

வேதார்த்த ஸங்க்ரஹ மென்பது பகவத்ராமாநுஜர் அருளிச்செய்த நவரத்ந நவநிதிக்ரந்தங்களுள் ஒன்று; ஒன்று என்பது மட்டுமன்று, முதன்முதலாக அருளிச்செய்த க்ரந்த மிதுவேயாகும். ஆதிசங்கராசாரியர் ஈசகேந-கட-ப்ரச்நாதிகளான தசோபநிஷத்துக்களுக்கும் பாஷ்யமியற்றியுள்ளார். ஸ்வாமி ராமாநுஜர் உபநிஷத்பாஷ்யமருளிச் செய்வதற்கு பதிலாக வேதார்த்தஸங்க்ரஹ மருளிச் செய்தார். உபநிஷத்துக்களில் எந்தெந்த வாக்கியங்களில் பிறர் பண்ணின அபார்த்தங்களைக் கண்டிக்கவேணுமோ அவற்றைக் கண்டித்து ஸமஞ்ஜஸமான அர்த்தத்தை ஸ்தாபித்தருளினர் வேதார்த்தஸங்க்ரஹத்திலே, மற்றபடி உபநிஷத்வாக்கியங்களுக்கு ப்ரதிபதார்த்தம் தெரிந்து கொள்ளவேணுமானால் இதரபாஷ்யத்தைக் கொண்டு தெரிந்து கொள்வதில் குற்றமில்லையென்று ஸ்வாமியின் திருவுள்ளம்.

இந்த திவ்யக்ரந்தத்தில் முடிவாக அறுதியிட்ட முக்கியமான விஷயமொன்றை இங்கு நிரூபிக்கிறோம். இக்கட்டுரைக்கு "வேதார்த்த ஸங்க்ரஹமும் வேததாத்பர்யமும்" என்று மகுடமிட்டிருக்கிறோம். வேதத்தின் தாத்பர்யம் ஒன்றிரண்டன்றிக்கே பலபலவாயிருக்குமே! அவற்றுள் எது இவ்விடத்தில் விவக்ஷிதம்? என்னில்; கேண்மின்; வேதங்களுக்கு முக்கியமான தாத்பரியம் ஒன்றேயாகும். 'ஸகலசராசரங்களும் பரமபுருஷனுக்கு சரீரபூதங்கள்' [தத் ஸர்வம் வை ஹரேஸ் தநு:] என்பதொன்றேயாம், *ததேவாக்நிஸ் தத் வாயுஸ் தத் ஸூர்யஸ் தது சந்த்ரமா:* என்கிற தைத்திரீயோபநிஷத்வாக்யத்தை யெடுத்துக்கொள்வோம். பரப்ரஹ்மத்தை யுத்தேசித்து 'அதுதான் அக்நி, அதுதான் வாயு, அதுதான் ஸூர்யன், அதுதான்

சந்திரன்' என்று சொல்லுகின்றது இந்த வாக்கியம். நெருப்பு தண்ணீராகுமா? தண்ணீர் நெருப்பாகுமா? ஒருவஸ்து மற்றொருவஸ்துவாக ஆசமுடியாதே. அப்படியிருக்க ததேவ, ததேவ, ததேவ.... என்று ஓதியிருப்பது எங்ஙனே பொருந்தும்? என்று பார்க்கவேணும். அக்நி வாயுஸூர்ய சந்திராதிகளை ஶரீரமாகக் கொண்டபாம் பொருள் ஒன்றேயாகலால் பொருந்தக் குறையில்லையென்று வேதாந்த பரிசயமுள்ளவர்கள் தெளிவிக்கக்கூடும்.

இந்த ஶரீராத்மபாவ வுணர்ச்சியினால் தேறுவதென்னவென்னில்; சரீரமான வஸ்துக்கள் ஆத்மாவான வஸ்துவுக்குக் கைங்கரியம் செய்யக் கடமைப் பட்டவை யென்பது தேறும். இதை ஒவ்வொருவரும் தங்கள் தங்களிடத்தில் செவ்வனே காணலாம். கைகால் தலைமுதலிய வுறுப்புகளோடு கூடிய நம் உடலானது இரவும் பகலும் சிரமப்பட்டு வேலைசெய்து போருவது அபலபிக்க முடியாதது; இப்படிவேலை செய்வது எதற்காக? என்று பார்க்க வேணும். பார்க்கில், உள்ளே யுறைகின்ற ஆத்மாவுக்காக- என்று தேறும். எப்படி தேறுமென்னில், உள்ளேயிருக்கின்ற அந்த ஆத்மாவானவன் "உத்க்ராந்தி கத்யாகதீநாம்" என்ற ப்ரஹ்மஸூத்ரப்படி ஒருநாளிலே உத்க்ரமணமடைந்து போவதையும் காணுநின்றோமல்லவோ? அப்போது இந்த கைகால் முதலான வுறுப்புகள் ஒன்றும் செய்யாமல் வாளாவிருப்பதையும் பார்க்கின்றோம். ஏன் வாளாவிருக்கின்றன? என்று வினவினால், இதுகாறும் உள்ளே எஜமானனொருவன் இருந்து வந்தபடியால் அவனுக்குக் கைங்கரியம் செய்யவேண்டியதாயிருந்தது, அந்த எஜமானன் கிளம்பிப் போய்விட்டபடியால் யாருக்குக் கைங்கரியம் செய்வது? கை கால் தலைமுதலான உறுப்புகளானவை ஸ்வாமியினுடைய கைங்கரியத்திற்காகவே ஏற்பட்டபடியால் ஸ்வாமி போனவாறே கைங்கரியம் ஓய்ந்துவிடுகிறது என்ன வேண்டியது தவிர வேறுண்டோ?

மின்ஸார விசிறி இல்லாத காலத்திலும், இப்போதும் அது இல்லாத விடத்திலும் ஒருசேவகன் எஜமானனுக்கு விசிறி கொண்டு வீசுகிறான். எதுவரையில் வீசுகிறான்? எஜமானன் நாற்காலியில் அமர்ந்திருக்கும் வரையில்தானே; அவன் எழுந்து சென்றபின் இந்த பணிவிடைக்காரன் பணிசெய்வதுண்டோ? இல்லை. இதனால், சேஷப்பட்டிருப்பதே ஶரீரலக்ஷணம் என்றறிகின்றோம். "யஸ்ய சேதநஸ்ய யத் த்ரவ்யம் ஸர்வாத்மநா ஸ்வார்த்தே நியந்தும் தாரயிதுஞ்ச ஶக்யம் தச்சேஷதைக ஸ்வரூபம் தத் தஸ்ய ஶரீரம்;" என்று நமது ஸ்ரீபாஷ்யகாரர் அருளிய ஶரீர லக்ஷணம் ஸமந்விதமானபடி கண்டீர்களல்லவா?

நம்முடைய ஶரீரத்தைவிட்டிட்டு, ஆத்மா என்கிற வொருவஸ்துவை எடுத்துக்கொள்வோம். அந்தர்யாமிப்ராஹ்மணத்தில் "யஸ்ய ப்ருதிவீ சரீரம்" என்று தொடங்கி "யஸ்ய ஆத்மா ஶரீரம்" என்னு மளவும் ஓதியிருப்பது கொண்டு ப்ருதிவ்யாதிகளைப்போலே ஆத்மாவும் பகவானுக்கு ஶரீரபூதம் என்று நிராக்ஷேபமாக ஸித்திக்கின்றது. ஆத்மாவுக்கு ஶரீரத்வம் ஸித்தித்தவாறே ஶேஷத்வமும் கூடவே ஸித்தித்ததாயிற்று. "ந அகிஞ்சித்குர்வதஶ் ஶேஷத்வம்" "அகிஞ்சித்கரஸ்ய ஶேஷத்வாநுபபத்தி:" என்கிற மூதுரைகளினால் ஶேஷத்வமென்பது கைங்கர்ய ரூபமென்று ஸித்தித்ததாகும். ஆக இவ்வளவால் வேத தாத்பர்யம் நிரூபிதமாயிற்று.

# இனி வேதார்த்த ஸங்க்ரஹ நிரூபணம்

ஒருவன் ஒருவனுக்கு அடிமை செய்வது—ஸேவை செய்வது என்பது இழிதொழில் தானே. இது துக்கரூபந் தானே. ஆனந்தமயனான ஆத்மாவுக்கு து:க்க ப்ரவ்ருத்தி கூடுமோ? என்கிற ஆக்ஷேபம் வலிதாக நிற்கிறது. இதற்குப் பரிஹாரம் முமுக்ஷுப் படிமுதலிய ரஹஸ்யக்ரந்தங்களிலுள்ளது நிற்க. வேதார்த்த ஸங்க்ரஹத்தின் முடிவில் ஸ்வாமி ஸாதித்திருப்பது காணீர், அங்கு.

> ''நநு ச, அத்யந்த ஶேஷதைவ ஆத்மந: அநவதிகாதிஶயம் ஸுகமிதி உக்தம் பவதி; ததேதத் ஸர்வ லோகவிருத்தம்; ததா ஹி......''

என்று தொடங்கி ஆக்ஷேபத்தை விளக்கி ஸமாதானத்தை ஸாரமாக அருளிச் செய்துள்ளார். இவ்விஷயத்தைச் சிறிது விவரித்தெழுத விரும்புகிறேன். ஒருவனுக்குப் பணிவிடைசெய்வதென்பது உலகில் கிலேஶமாகக் காணப்படுகிறதே யொழிய ஆனந்தமாகக் காணப்படவில்லை. *ஸேவா ஶ்வவ்ருத்திராக்யாதா தஸ்மாத் தாம் பரிவர்ஜயேத்* என்று மநுமஹர்ஷியும் கூறியுள்ளார். பணிவிடைசெய்வதென்பது நாய்வேலையாகையால் அதைவிட்டுவிடவேண்டியதென்று கண்டிப்பாகக் கூறினர் மஹர்ஷி. ஆனந்தமயனான ஆத்மா ஆனந்தரூபமாய் ஆனந்தஹேதுவான செயலைச்செய்து ஆனந்தப்படவேண்டியிருக்க, கிலேஶத்திற்கே ஹேதுவான கைங்கரியத்தைச் செய்துவருந்தலாமோவென்பது ஆக்ஷேபம். இதற்கு ஸமாதானம்;— பணிவிடைகள் இரண்டு வகையாக வுண்டு; தேஹபோஷணத்திற்காகச் செய்வது ஒன்று; அதாவது கூலிவேலை செய்வது. மற்றொன்று ஆத்மானந்தத்திற்காகப் பணிவிடை செய்வது. அதாவது பகவத் பாகவத ஆசார்ய விஷயத்தில் கைங்கரியம் செய்வது. இவற்றுள் தேஹபோஷணார்த்தமான பணிவிடையினால் கிலேஶம் விளையுமே யொழிய பகவத் பாகவத ஆசார்ய கைங்கரியங்களினால் சிறிதும் கிலேஶம் விளையாது. கிலேசமில்லை யென்பதுமட்டுமன்று; பரமானந்தம் கொந்தளிக்கும். ஒரு பரமபக்தன் பகவானுக்குச் செய்யும் கைங்கரியத்தையும், பாகவதோத்தமர்களின் பெருமையை யறிந்தவன் அவர்களுக்குச் செய்யும் கைங்கரியத்தையும், சிஷ்யன் ஆசாரியனுக்குச் செய்யும் கைங்கரியத்தையும், காமுகன் காமினிக்குச் செய்யும் பணிவிடைகளையும் பார்க்கின்றோம். இவை வெகு மகிழ்ச்சியுடன் நடைபெறுகின்றனவென்பதை எங்குங் காணுநின்றோம்.

துஷ்யந்த மஹாராஜன் வேட்டையாடிக் கொண்டு செல்லும்போது கண்வ மஹர்ஷியின் ஆச்ரமத்தில் இளைப்பாறப்புகுந்தான். சகுந்தலையென்னும் தெய்வ மாதைக்கண்டு காதல் கொண்டான். அவளோடு ஸம்பாஷிக்கவும் பெற்றான். அப்போது சொல்லுகிறான்-'ஸம்வீஜயாமி நலிநீதள தாலவ்ருந்தை:? அங்கே நிதாய கரபோரு! யதாஸுகம் தே ஸம்வாஹயாமி சரணாவுத பத்மதாம்ரௌ' என்று. சகுந்தலையின் முகத்தில் வேர்வை நீர் பெருகுவதைக்கண்டு அரசன் பொறுக்கமாட்டாமல், மாதரசே! தாமரையிலையை விசிறியாகக்கொண்டு வீசட்டுமா? உன் கழலிணையை மடியில் இட்டுக்கொண்டு வருடட்டுமா? என்கிறான். கேட்டுக்கொண்டே அப்பணிவிடைகளைச் செய்கிறான். இவனோ சக்ரவர்த்தி! அவளோ ஒரு காட்டுப் பெண். காதல் விளைந்ததே காரணமாகக் கைங்கரியம் செய்வதில் அன்பு ததும்

பிய குதூஹலம் கிளர்ந்தது. இது ஸர்வஸஹஜமானது. இதனுல் என்ன தெரிந்து கொள்ளுகிறேம்! உகப்பில்லாதஇடத்தில் ப்ரயோஜநார்த்தமாகச் செய்யும் பணி விடையே துக்க ரூபமென்றும், உகந்தவிடத்தே ஸ்வயம் ப்ரயோஜனமாகச் செய்ய ப்ராப்தமாகும் கைங்கரியம் ஆனந்தமயமாகவேயிருக்குமென்றும் தெரிந்து கொள்ளுகிறேம். வேதார்த்த ஸங்க்ரஹாவஸாநத்தில் பரக்கப்பேசப்பட்ட அர்த்தத்தைப் பிள்ளைலோகாசார்யர் முமுக்ஷுப்படியில்—"ஶேஷத்வம் து:க்கரூபமாகவன்றே நாட்டில் காண்கிற தென்னில். அந்த நியமமில்லை உகந்த விஷயத்துக்கு ஶேஷமாயிருக்கு மிருப்பு ஸுகமாகக் காண்கையாலே" என்று ஸாரஸங்க்ரஹமாக வருளிச் செய்தார்.

திருமந்த்ரார்த்தம் நிர்வஹித்தருளாநின்ற நம் ஆசாரியர்கள் "அறியவேண்டும் அர்த்தமெல்லாம் இதுக்குள்ளேயுண்டு" என்று ஸாதித்து "அதாவது அஞ்சர்த்தம்" என்றார்கள். அர்த்தபஞ்சகம் என்னப்படுகிற பரமபுருஷ ஸ்வரூப-சேதந ஸ்வரூப-உபாயஸ்வரூப-விரோதிஸ்வரூப-புருஷார்த்தஸ்வரூபங்களே ஸகலசாஸ்த்ரப்ரமேயமென்று நிஷ்கர்ஷிக்கப்பட்டுள்ளது. இவற்றுள் புருஷார்த்தஸ்வரூபமே முக்கியமானது. புருஷார்த்தமென்பது நாம் பெறும்பேறு. பரமனடி சேர்வது தான் புருஷார்த்தம் [பலன்] என்றாலும், பரமனடி சேர்ந்து என்ன செய்வது? என்று கேள்வி பிறக்கும். உபநிஷத்தில் *ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி* என்றுள்ளது. இதற்குப் பிறர்கூறும் அபார்த்தம் மறக்கவும் மறுக்கவும் தக்கது. ஆண்டாள் திருப்பாவையில் *வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்து* என்கையாலே ஆத்யந்திக து:க்கத்வம்ஸத்தோடு நில்லாமல் ஆனந்தாநுபவமுமுள்ளதாகத் தெரியவருகிறது *முக்திர் மோக்ஷோ மஹாநந்த:* என்று நிகண்டுவுமுள்ளது. நைஷதகாவியத்தில் நளமஹாராஜன் ஒரு ஹம்ஸத்தைப் பிடித்துக்கொண்டு விடாமலிருக்க, அந்த ஹம்ஸம் பலவாறு கெஞ்சி விடுபட்டமையைச் சொல்லுகிற மஹாகவி ஒரு முக்தாத்மாவோடு அந்த ஹம்ஸத்தை ஒப்பிட்டு ஶ்லேஷபங்கியாலே சொல்லுகிறன்—(இரண்டாவது ஸர்க்கம்—முதல் சுலோகம்)—"அதிகத்ய ஜகத்யதீச்வராத் அத முக்திம் புருஷோத்தமாத் தத:, வசஸாமபி கோசரோ நயஸ் ஸ தமாநந்தமவிந்தத த்விஜ:." என்று அற்புதமாகக் கூறினன். இதில் (த்விஜ: புருஷோத்தமாத்—முக்தி:) என்கிற பதங்கள் ஶ்லிஷ்டங்கள். முக்தாத்மா வாசாமகோசரமான ஆனந்தத்தை யடைகிறனென்பட்டது. துக்கத்வம்ஸமே மோக்ஷமென்றும், பாஷாண கல்பதைவ முக்தி: என்றும் சொல்லுபவர்கள்பக்ஷத்தில் மஹாநந்தத்திற்கு ப்ரஸக்தியில்லை. முக்தாத்மாக்களின் வேஷத்தைச் சொல்லுகிற கூரத்தாழ்வான் ஸ்ரீவைகுண்டஸ்தவத்தில் "கைங்கர்ய நித்யநிரதை: பவதேகபோகை:" என்கிறார். *உற்றேனுகந்து பணிசெய்து உனபாதம் பெற்றேன்* என்றாராழ்வார். இவ்விபூதியில் நாம் செய்வதும் கைங்கரியமே; அந்த விபூதிக்குச் சென்று செய்வதும் கைங்கர்யமே. இதுதான் எம்பெருமானுருடைய ஸித்தாந்தம். இதனை விளக்கவே இக்கட்டுரை வரையப்பட்டது. ... ... ... •

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# உபயவேதாந்த விநவிடை

## இருவர் ஸம்பாஷணைமுகத்தாலே உபயவேதாந்தப் பொருள்கள் விளக்கப்படுகின்றன.

**கண்ணன்**—அரியபெரிய விஷயங்களைப் புத்தகங்களில் எவ்வளவுநாள் வாசித்தாலும் மனத்தில் தேங்கி நிற்பதில்லை; ஒருவர்வாயிலாகக் கேட்டால் அது தரித்து நிற்கிறது. ஏழெட்டு வருடங்களுக்கு முன்பு ஒரு ஸமயம் நான் கல்கத்தா மெயிலில் புறப்படவேண்டியிருந்தது. அந்த மெயில் ஸெண்ட்ரலில் எத்தனை மணிக்குப் புறப்படுகின்றதென்று கெய்டில் இரண்டு மூன்று விசை பார்த்தேன். அதில் கண்ட நேரம் மறந்தே போயிற்று. ஒரு நண்பரைக் கேட்டேன்; அவர் (இரவு) 8-15க்குப் புறப்படுகிறது என்றார். அது நெஞ்சில் திடமாகப்பதிந்துவிட்டது. எத்தனை வருஷமானாலும் அது மறப்பதேயில்லை. அதேபோல் சாஸ்த்ரார்த்தங்களும் புத்தகங்களில பார்ப்பதைவிட ஒருவர்முகமாகக் கேட்டால் மறவாமலிருக்குமென்று தோன்றுகிறது. ஆகவே நான் கேட்கும் விஷயங்களுக்கு நீர் விடையிறுத்துக் கொண்டே வந்தால் நல்லது; இது முடியுமா? அவகாசமுள்ளதா?

**ராமன்**—கண்ணா! நீ சொல்லுவது வாஸ்தவம். கல்வியறிவைவிட கேள்வியறிவு மிகச்சிறந்தது. சில மஹான்கள் பஹுச்ருதர்களென்று கொண்டாடப்படுகிறார்களல்லவா? 'இது முடியுமா? அவகாசமுள்ளதா?' என்று கேட்கிறாயே; ஏன் முடியாது? இது நமக்கு நல்ல போதுபோக்கல்லவா? இதைவிட வேறு என்ன காரியமிருக்கிறது? இதில் எனக்கும் லாபமுள்ளது. என்னவென்றால், நீ கேட்கும் விஷயங்களில் சிலவற்றுக்கு விடைகூற எனக்கு ஸ்புரியாவிடில் நான் பெரியவர்களிடம் சென்று கேட்டோ நூல்களைப் பார்த்தோ உனக்குச் சொல்லுவதற்கு இடமேற்படுமன்றோ. அது எனக்கும் நன்மை தானே. நாடோறும் நாம் இரண்டுமணிகாலமாவது கூடிப்பேசுவோம். இன்று நல்ல நாளாகவேயிருக்கிறது. கேட்கத்தொடங்கு.

**கண்ணன்** — 'பஹுச்ருதர்' என்று ஒருபதம் சொன்னீரே, அதற்கு என்ன அர்த்தம்? பல விஷயங்களையும் கேள்விப்பட்டவர் என்றுதானே அர்த்தம்?

**ராமன்**—அவ்வளவேயன்று. 'பஹு ச்ரோதவ்யம், பஹுப்ய: ச்ரோதவ்யம், பஹுதா ச்ரோதவ்யம' என்பர் பெரியோர். எம்பெருமானார் ஸ்வதஸ்ஸர்வஜ்ஞராயிருக்கச்செய்தேயும் *பஞ்சாசார்ய பதாச்ரித:"என்று வடுகநம்பிபணித்தபடி ஐவரை ஆசார்யராகக் கொண்டனர். பல மஹான்களிடம் கேட்கவேணும்; பலபடியாகக் கேட்கவேணும்; பலபலவும் கேட்கவேணும். 'பஹுச்ருதர்' என்ற பதத்தில் இவ்வளவும் அடங்கியுள்ளது. தைத்திரீய ஆரண்யகத்தில் **கச்யப**ரென்கிற மஹர்ஷியைப் பற்றி ஓதப்பட்டுள்ளது. ❋ருஷிர் ஹ தீர்க்கச்ருத்தம:, இந்த்ரஸ்ய வர்மோ அதிதிரிதி❋ என்று இந்திரனுக்கு மிகவும் வேண்டியவராம் அவர். அடிக்கடி இந்திர ஸபைக்கு வருவராம். அவரை **தீர்க்கச்ருத்தமர்** என்கிறது வேதம். வெகுகாலம் பலபலவும் கேட்டவர்களுள் தலைவராம் அவர்.

**கண்ணன்**—திருப்பாவையில் "கற்றுக் கறவைக் கணங்கள் பலகறந்து" என்ற விடத்து ஸ்வாபதேசார்த்த ப்ரவசனத்தில் இதை விரிவாகக் கேட்டிருக்கிறேன். கன்று—கறவை, என்று பிரிப்பது தவிர **கற்று** என்றே பிரித்து, தான் சுசடறக் கல்வி பயின்று, காமதேனுக்கள்போன்ற பல பெரியார்களிடம் பால்போன்ற மதுரார்த் தங்களை க்ரஹித்து—என்று சொல்லக் கேட்டிருக்கிறேன்.

**ராமன்**—நீயும் பலவிடங்களில் பலகால் கேட்டிருக்கிருயென்று அறிவேன். பலகால் கேட்டாலுங்கூட மறதியென்பது மனிதர்களுக்கு இயற்கையாகையாலே சிறந்த அர்த்த விசேஷங்கள் மனத்தில் தரித்திருப்பது சிரமந்தான்; உண்பதெல் லாம் ஜரித்துப்போனாலும் மீண்டு மீண்டும் உண்பதை விடுவதில்லையே. "செவிக் குணவில்லாதபோழ்து சிறிது வயிற்றுக்கு மீயப்படும்" என்கிருர் குறளாசிரியர். இருக்கட்டும். கேட்க விரும்புமவற்றைக் கேள்.

**கண்ணன்**—குருபரம்பரா ஸ்மரணபூர்வகமாகக் கேட்கத் தொடங்குகிறேன். நம்முடைய ஸ்ரீவைஷ்ணவதர்சநம் ஆழ்வார்கள் தொடங்கியே நிகழ்ந்துவருவதாயி னும் அவர்களின் காலம் மிக முற்பட்டதாகையாலே ஸ்ரீமந்நாதமுனிகள் தொடங் கியே ப்ரவ்ருத்தமாயிற்றென்றும்; அந்த நாதமுனிகள் **நியாயதத்வ** மென்றொரு திவ்ய க்ரந்தமருளிச் செய்திருந்தாரென்றும், அதுவும் லோபித்துவிட்டதென்றும் கேள்விப் பட்டிருக்கிறேன். அவர்க்குப் பிறகு க்ரந்தங்களெழுதிய ஆசாரியர்யாவர்?

**ராமன்**—நாதமுனிகளுக்குப் பிறகு உய்யக்கொண்டார், மணக்கால் நம்பி என்னுமாசிரியர்கள் இருந்தும் அவர்கள் உபதேஶ நிஷ்டர்களாயிருந்தார்களே யொழிய க்ரந்த மொன்றும் அருளிச்செய்ததாகத் தெரியவில்லை. முதன் முதலாக ஆளவந்தாரே க்ரந்தமருளிச் செய்தாரென்று சொல்லவேண்டியதாகிறது.

**கண்ணன்**—ஆளவந்தார்க்கு ஸம்ப்ரதாயார்த்தங்களெல்லாம் எவ்வாறு கிடைத்தன? இவர் மஹாவித்வானுக விளங்கினவர் என்பது தெரியும். உடையவர் ப்ரசண்டபண்டிதோத்தமராயிருந்தும் பெரியநம்பி திருமலைநம்பி திருக்கோட்டியூர் நம்பி திருமாலையாண்டான் திருவரங்கப்பெருமாளரையர் போல்வாரான ஆசாரியர் களை அடிபணிந்துதானே ஸத்ஸம்ப்ரதாயார்த்தங்கள் உணரப்பெற்றுர். ஆளவந் தார் இவ்வாறு அறியப் பெற்றதுண்டோ?

**ராமன்**—ஆளவந்தார் ஸ்ரீமந்நாதமுனிகளின் திருப்பேரனுர். ஆனல் நாத முனிகளின் காலத்தில் இவர் அவதரித்தருளவில்லை. நாதமுனிகள் யோகிச்ரேஷ்ட ராகையாலே தமக்கு மஹாமேதாவியான திருப்பேரனுர் திருவவதரிக்கப்போகிரு ரென்பதை யோகபலத்தாலறிந்து, அவர்க்கு அர்த்தவிசேஷங்களை உபதேசிக்கும் படி உய்யக்கொண்டாரிடத்திலும் மணக்கால்நம்பியிடத்திலும் பலபல அர்த்த விசேஷங்களை உபதேசித்து வைத்திருந்தார். ஆளவந்தார் திருவவதரிப்பதற்கு முன்னமே உய்யக்கொண்டாரும் திருநாடலங்கரித்துவிட்டபடியால் நாதமுனிகள் தம்மிடம் சேமித்துவைத்திருந்த அர்த்த விசேஷங்களையும் மணக்கால்நம்பியிடம் தந்தருளி இவற்றையும் நீர் (அவதரிக்கப்போகிற) நாதமுனிபௌத்ரருக்கு உபதே சித்தருளீர் என்று ஸாதித்திருந்தார். மணக்கால்நம்பி நாதமுனி பௌத்ரரின் திரு வவதாரத்தை எதிர்பார்த்திருக்கையில் ஸ்ரீயாமுநாசார்யர் திருவவதரித்து மஹா

வித்வத்ஸார்வபௌமராய் ராஜஸபையிலும் வெற்றிபெற்று *ஆஸ்தித யௌவராஜ்ய ராய் எழுந்தருளியிருப்பதறிந்து ஆளவந்தாரென்னும் திருநாமம் பூண்டிருந்த அவரைத் தாமே அநுவர்த்தித்து, நாதமுனிகளிடத்தும் உய்யக்கொண்டாரிடத்தும் தாம் பெற்றிருந்த ஸகலார்த்தங்களையும் உபதேசித்தருளினார்.

**கண்ணன்**—அடியேனுடைய பெரிய ஸந்தேஹமொன்றை விஜ்ஞாபிக்கிறேன். ஆளவந்தார் ராஜஸபைக்கு எழுந்தருள்வதற்கு முன்பு "ஆசைலாத் அத்ரிகந்யா சரணகிஸலயந்யாஸதந்யோபகண்டாத் ஆரக்ஷோநீதஸீதாமுககமலஸமுல்லாஸ ஹேதோச் ச ஸேதோ:, ஆ ச ப்ராச்யப்ரதீச்யக்ஷிதிதரயுகலாத் ஸூர்யசந்த்ராவதம் ஸாத் மீமாம்ஸாசாஸ்த்ரயுக்மச்ரமவிமலமநா: ம்ருக்யதாம் மாத்ருசோந்ய:" என்கிற ச்லோகத்தை யெழுதியனுப்பி யிருந்ததாகக் கேள்விப்பட்டிருக்கிறேன். இதில் கடைசிபாதத்தில் [உபயமீமாம்ஸையிலும் தம்மை வெல்வாரில்லை] யென்று காட்டி யிருக்கிறாரே; ஜைமினி மீமாம்ஸையும் (வ்யாஸ ப்ரணீத) சாரீரகமீமாம்ஸையுந் தானே உபயமீமாம்ஸை யென்பது. ஆளவந்தார் காலத்தில் சாரீரகமீமாம்ஸைக்கு ஶங்கரபாஷ்யந்தவிர வேறு வியாக்கியானமில்லையே. எம்பெருமானார் காலத்தில் தானே ஸ்ரீபாஷ்ய மவதரித்தது. ஆளவந்தார் எந்த வியாக்கியானங்கொண்டு சாரீரகமீமாம்ஸையை அதிகரித்தார்? என்பது அடியேனுடைய ஜிஜ்ஞாஸை.

**ராமன்**—திருவாய்மொழிக்குத் திருக்குருகைப்பிரான்பிள்ளான் சுருக்கமான வியாக்கியானம் ஸாதித்தார்; பிறகு விபுல வியாக்கியானங்கள் அவதரித்தன. பிள்ளானுக்கு முற்பட்டவர்கள் திருவாய்மொழி காலக்ஷேபம் செய்யாமலா இருந் தார்கள்? எம்பெருமானார் திருமாலையாண்டான் பக்கலிலே திருவாய்மொழிப் பொருள் கேட்டருளினதாக இருக்கிறதே; மூலத்தின்மேல்தானே ப்ரவசனம் நடந்துவந்தது. அதேபோல் ஆளவந்தாரும் சாரீரகமீமாம்ஸையின் பொருளை மூலத்தின்மேல் அதிகரித்தாரென்னத் தட்டில்லை. உபநிஷத்துக்கள், பகவத்கீதை முதலியவற்றுக்கும் மூலத்தின்மேல்தானே ப்ரவசனம் நடந்துகொண்டிருந்தது.

**கண்ணன்**—ஸர்வஜ்ஞரென்னலாம்படி யெழுந்தருளியிருந்த ஆளவந்தாருக்கு ப்ரஹ்மஸூத்ரபாஷ்யம் அவதரிக்கவேணுமென்று ஆசையிருந்ததாக சரமஸமய நிகழ்ச்சியினால் தெரியவருகின்றதே; அவர் தாமே பாஷ்யமருளிச்செய்திருக்கக் கூடாதா? ஸ்வாமி எம்பெருமானாரைக்காட்டிலும் அவர் ப்ரசண்டபண்டிதரல்லவா? அவர் ஏன் அருளிச்செய்திலர்?

**ராமன்**—இக்கேள்வி அவசியம் கேட்கவேண்டியதே. ஸித்தித்ரயம் ஆகம ப்ராமாண்யம் முதலிய உத்க்ரந்தங்களை யருளிச்செய்த ஆளவந்தாருக்கு வைதுஷ் யத்திலும் க்ரந்தரசநா ஸாமர்த்தியத்திலும் குறையில்லைதான். அப்படி யிருந்தும் ப்ரஹ்மஸூத்ரபாஷ்யம் ஏன் அருளிச்செய்திலர்? என்றால், ஆர்ஷவியாக்கியான மான போதாயநவ்ருத்தி ஏற்கனவே அவதரித்திருந்தது. "ருஷேர் பாவம் ந அந் ருஷிர் வேதிதுமர்ஹதி" யாகையாலே அந்த வியாக்கியானத்தைக் கடாக்ஷித்துவிட்டு பாஷ்யம் பண்ணவேண்டியதாயிருந்தது. அந்த போதாயநவ்ருத்திக்ரந்தம் காஶ்மீர மண்டலத்தில் ராஜபவனத்தில் ஸுரக்ஷிதமாயிருந்தது. அங்கேயெழுந்தருளி அந்த வ்ருத்திக்ரந்தத்தை ஸம்பாதித்துக் கடாக்ஷித்தருள ஆளவந்தார்க்கு ஸௌகரிய

மேற்படவில்லை. எம்பெருமானுர் ஃஏகாந்திநாம் த்வாதஶபிஸ் ஸஹஸ்ரைஸ் ஸம் ஸேவிதஸ் ஸம்யமிஸப்தஶத்யாஃ என்னும்படி பாஶ்ஶதபரஸ்ஸஹஸ்ர ஶிஷ்யமண்டலீ பரிவ்ருதராயிருந்தபடியாலே காச்மீர யாத்திரைக்கு ஆநுகூல்யமிருந்தது. தம்மைப் போலவே மஹாவித்வானுயிருந்த கூரத்தாழ்வானுடைய ஸஹயோகமும் கிடைத்திருந்தது. அநாயாஸமாகக் காச்மீரமண்டலத்திற்செழுந்தருளி வ்ருத்திக்ரந்தத்தைக் கடாக்ஷித்துவர ஸௌகரியமிருந்தது. தாமருளிச்செய்த ஸ்ரீபாஷ்யத்தின் உபக்ரமத்தில் "பகவத்போதாயநக்ருதாம் விஸ்தீர்ணாம் ப்ரஹ்மஸூத்ர வ்ருத்திம் பூர்வாசார்யாஸ் ஸஞ்சிக்ஷிபு:; தந்மதாநு ஸாரேண ஸூத்ராக்ஷராணி வ்யாக்க்யாஸ்யந்தே" என்றருளியுள்ள ஸூக்திகளாலும் இது தெரிவிக்கப்பட்டதாயிற்று.

**கண்ணன்**—விசிஷ்டாத்வைத ஸித்தாந்த ஸ்தாபநத்திற்காகத்தானே ஸ்வாமி ஸ்ரீபாஷ்ய மருளிச்செய்தது; அந்த ஸ்ரீபாஷ்யத்தில் விசிஷ்டாத்வைத மென்கிற பதம் எங்கேயாவது உள்ளதா! ஆளவந்தாருடைய க்ரந்தங்களிலாவது உள்ளதா?

**ராமன்**—பிற்பட்ட ஆசாரியர்களின் க்ரந்தங்களில்தான் விசிஷ்டாத்வைதமென்று ஶப்தப்ரயோகம் காண்கிறது. அதனுலென்ன? விசிஷ்டாத்வைதமென்னும் படியான அர்த்தவிஶேஷத்தை ஆழ்வார் தமது திவ்யப்ரபந்தங்களில் காட்டியிருந்தார்; அவ்வர்த்தம் நாதமுனிகளால் ப்ரவசனம் செய்யப்பட்டுவந்தது. அவ்வர்த்தம் ஆளவந்தாராலும் ஸ்ரீபாஷ்யகாரராலும் க்ரந்தாரூடமாக்கி வைக்கப்பட்டது. பின்புள்ள ஆசாரியர்கள் அவ்வர்த்தத்திற்குப் பொருத்தமாக விசிஷ்டாத்வைதமென்று வ்யபதேசிக்கத் தொடங்கினர்கள்.

**கண்ணன்**—விசிஷ்டாத்வைத பதத்திற்குப் பொருத்தமான அவ்வர்த்த விசேஷங்களை ஸாரஸங்க்ரஹமாக அருளிச்செய்யவேணுமென்று பிரார்த்திக்கிறேன். மற்றும் சில ஜிஜ்ஞாஸுக்களும் இங்கே கூடியிருக்கிருர்கள். ஸாதித்தருளவேணும்.

**ராமன்**—நீ கூட்டங்கூட்டிப் பெரிய ஸபையாக்கிவிட்டால் உபந்யாஸம் வளர்ந்துவிடும். இப்போது நீ ஜிஜ்ஞாஸுவாக வந்து கேட்கவே நான் உனக்குச் சொல்லுகிறேன். நீ ஆசைதீருமளவுங் கேட்டுத் தரித்துக்கொண்டு ஸபாமண்டபத்தில் உபந்யஸிக்கத்தொடங்கு. நீ உணரவிரும்பும் விஷயங்களை ஒவ்வொன்ருகக் கேட்டுவா, பதில் சொல்லி வருகிறேன். முக்கியமாக ஒன்று சொல்லுகிறேன் கேள்; கீழண்டை கோபுர வீதியில் ஸமீப காலத்தில் ஜீர்ணோத்தாரணம் செய்யப்பெற்ற உடையவர் திருமாளிகையில் ஸ்ரீமதுபயவே. அக்காரக்கனி ஸம்பத்குமாராசார்யஸ்வாமி தினப்படியாகப் பகலில் வேதாந்தார்த்தங்களை எளிதில் புரிந்துகொள்ளும்படியாக அருளிச்செய்து வருகிருர்; பலர் கேட்டு மகிழ்ந்துவருகிருர்கள்; நீயும் அந்த கோஷ்டியில் அந்வயித்துக்கேட்டுவா; பல விஷயங்களை எளிதாக உணரப்பெறுவாய்.

**கண்ணன்**—ஏற்கனவே அடியேன் அந்த கோஷ்டியில் அந்வயித்துக் கேட்டு வருபவனே; அதனுல்தான் பலபல ஜிஜ்ஞாஸைகள் தோன்றி உம்மிடமும் கேட்க விரும்பினேன். * ஸ்தூணாநிகநநந்யாயமென்று ஒன்றுண்டே; அந்த ரீதியில், கேட்ட விஷயங்களைத் திடப்படுத்திக்கொள்ளவேண்டியே உம்மிடத்திலும் கேட்க விரும்பிவந்தபடி. கூரத்தாழ்வான் *ஸம்வதேத கில யத் ப்ரமாந்தரை: தத் ப்ரமாணமிதி யே ஹி மேநிரே* என்று வரதராஜ ஸ்தவத்தில் ஸாதிக்கிருரல்லவா?

நிற்க. விசிஷ்டாத்வைத மென்கிற பதம் ப்ரஸ்துதமானபடியாலே அதைப்பற்றியே வினவுகிறேன். அந்த பதத்தின் பொருளை விவரித்து ஸாதிக்கவேணும்.

ராமன்—இதைப்பற்றி நீ இதுவரையில் எங்குங் கேட்டதில்லையா? கேட்டிருந்தால் அதைச் சொல்லு, கேட்போம்.

கண்ணன்—கேட்டிருக்கிறேன். விஜ்ஞாபிக்கிறேன்; நன்றே தீதோ திருத்திப் பணிகொள்ளவேணும். அத்வைதம் என்பதற்கு அபேதம் என்று பொருள். எப்படியென்றால்; த்வயோ: பாவ: த்விதா, இரண்டாயிருத்தல் (அதாவது) பேதம் என்றபடி. த்விதைவ த்வைதம்—த்விதா என்றாலும் த்வைதமென்றாலும் பர்யாயமென்றபடி. ஆக த்வைதம் என்பதற்கு பேதமென்று பொருள் தேறிற்று. ந த்வைதம்—அத்வைதம் = அபேதமென்றதாயிற்று. அதற்குமேல், (விசிஷ்ட) என்கிற பதம் சேர்ந்து [விசிஷ்டாத்வைதம்] என்றாகியிருக்கிறது, என்று நான் க்ரஹித்திருக்கிறேன். இனி, விசிஷ்ட என்கிற பதத்திற்கும் அத்வைதம் என்கிற பதத்திற்கும் ஸமாஸம் செய்யும் வகையில் ஏதோ பேதமிருப்பதாகக் கேள்வி. அதில் நான் க்ரஹித்திருக்கும் வகையைச் சொல்லுகிறேன். விசிஷ்டஞ்ச விசிஷ்டஞ்ச விசிஷ்டே; தயோ: அத்வைதம்—விசிஷ்டாத்வைதம். ஒரு விசிஷ்ட பதத்தினால் ஸூக்ஷ்மசிதசித்விசிஷ்டப்ரஹ்மம் கொள்ளப்படுகிறது; மற்றொரு விசிஷ்டபதத்தினால் ஸ்தூலசிதசித்விசிஷ்டப்ரஹ்மம் கொள்ளப்படுகிறது. இவ்விரண்டுக்கும் அபேதம் கொள்ளுவது விசிஷ்டாத்வைத மதம்—என்று கேட்டிருக்கிறேன்; இது ஸரிதானே.

ராமன்—இப்படி ஸமாஸம் சொல்லுவதற்கு ஏகசேஷஸமாஸம் என்று பெயர். வியாகரண ரீதியில் இதன் உபபத்தியை ஆராயவேண்டும். மேலும், இப்படி ஸமாஸம் செய்வதில் நமது ஸித்தாந்தத்தின் தத்துவப் பொருள் தேறுகிறதா என்பதையும் ஆராயவேண்டும். "விசிஷ்டஸ்ய அத்வைதம்-விசிஷ்டாத்வைதம்" என்று ஸமாஸம் கொள்வதே எளிய வழி. "ஒன்றே தானுள்ளது, பல இல்லை" என்றார்கள் அத்வைதிகள்; அதை நாம் பரிஷ்கரித்துச் சொல்லும் போது "சேதநாசேதந விசிஷ்டமான ப்ரஹ்மம் ஒன்றே தானுள்ளது" என்கிறோம், சேதநங்களாயும் அசேதநங்களாயுமுள்ள பதார்த்தங்களை இல்லை செய்யப்போகாது; அவை பொய் என்னவும் தகாது. தனித்தனியே பார்க்கில் பல பொருள்களுளவேயாம். அவற்றோடு கூடிய [அவற்றை ஶரீரமாக வுடைய] பரப்ரஹ்மம் ஒன்றேயாம்—என்பது நம் ஆசாரியர்களின் பரிஷ்காரம். (தொடரும்)

# என் மனத்தில் தோன்றின ஓர் ஆச்சரியம்

பண்டைக்காலத்தில் இல்லாத பலபல இயந்திரங்கள் அற்புதமாக ஏற்பட்டுக்கொண்டிருக்கின்றன. கண்டவளவில் கண்தெறிக்கும்படியான பிரபல யந்திரங்கள் கிடக்கட்டும். தினப்படியாக ஒவ்வொருவரும் உபயோகங்கொள்ளும்படியான ஒரு சிறு யந்திரத்தைப்பற்றி என்மனத்தில் தோன்றின ஆச்சரியத்தை யெழுதுகின்றேன். டைம்பீஸ் இல்லாத க்ருஹமே யிராது. இதை உற்று நோக்குங்கள். இதில் நாலு முள்ளு அமைக்கப்பட்டிருக்கிறது. ஒரு முள்ளு ஒரு மணிகாலத்தில் ஒரு லக்கம்விட்டு அடுத்த லக்கத்திற்கு வந்து சேருகிறது. இந்த முள்ளு இக்காரியத்தை ஏற்றத்தாழ்வில்லாமல் செய்துவருகின்றது. மற்றொரு முள்ளு அந்த ஒரு மணி காலத்தில் பன்னிரண்டு லக்கங்களைச் சுற்றிவரும்படியான கட்டளை

பெற்று அப்படியே சுற்றி வருகின்றது. இதிலும் ஏற்றத்தாழ்வு கிடையாது. இன்னொரு முள்ளுக்கு என்ன கட்டளை யென்றால், அறுபது சிறுகோடுகளிட்டு 'ஒரு மினிட்டில் இத்தனை கோடுகளையும் நீ தாண்டி தலையிடத்தில் நிற்கவேணுமென்று கட்டளை. அதுவும் அப்படியே நிறைவேற்றுகிறது. இன்னுமொரு முள்ளுசெய்யும் பணியோ வெகு ஆச்சரியமானது. அந்த முள்ளை ஒரு லக்கத்திலே நிறுத்திவைத்து இந்த எண்ணுள்ள மணி அடிக்கும்போது என்னை நீ தட்டியெழுப்பவேணுமென்றால், இரவில் ஒரு மணியோ இரண்டு மணியோ இரண்டரைவீசம் மணியோ எந்த மணிக்குக் கட்டளையிட்டு வைத்தாலும் அதேபணிக்கு நாம் அலறியெழுந்திருக்கும்படி நம்மைத் தட்டி யெழுப்புகின்றது. மேலே சொன்ன காரியங்களை ஒரு மனிதன் வழுவறச் செய்வனா? ஒரு நாளைக்காவது செய்வனா?

56 வருடங்களுக்கு முன்பு 45 ரூ. கொடுத்து ஒரு பெரிய கடியாரம் வாங்கினேன். அதன் பிறகு அதற்கு ஒருநாள்கூட ஆயில் தடவினதுமில்லை. 5 நாள் 8 நாள் வெளியூர் போக நேர்ந்தால் சாவி கொடுத்துவிட்டுச்சென்று எட்டாநாள் திரும்பினால் தன் கடமையை வழுவறச் செலுத்திக்கொண்டிருக்குமேயல்லது 'வீடு பூட்டியிருக்கிறதே, வாசலில் சேவகன் தூங்குகிறானே, நாமும் தூங்குவோமே, என்று கிடப்பதில்லை. அந்த நிலைமையைப் பார்க்கும்போது 'இப்படியொரு டணிவிடைக்காரன் நமக்குக் கிடைக்கமாட்டானா?' என்று தோன்றும். இதைப்பற்றி ஒரு பெரியவரைக் கேட்டேன். 'அசேதநமாகப் பிறந்தாலொழிய இத்தகைய பாரதந்திரியம் வாய்க்காது' என்றார். ஆகவேதான் ஆசாரியர்கள் 'அசித்வத் பாரதந்திரியம்' என்கிறார்கள் என்றெண்ணினேன். உலகில் எத்தனைகோடி கடியாரங்களுண்டோ அத்தனையும் சங்கேதம்போல் பெரும்பாலும் ஒரே ரீதியாய் நடப்பதும் பெரிய அதிசயமல்லவா? ... ... ... *

# ஸ்ரீ ஸுதர்சந சதகம்

ஸ்ரக்தரா விருத்தத்தில் நூறு சுலோகங்கள் கொண்ட ஸுதர்சநசதக ஸ்துதியைக் கேள்விப்படாதாரில்லை. காம்யார்த்திகள் பலர் இதனைப் பாராயணம் செய்வது எங்குமுண்டு. இதில் ஒவ்வொரு சுலோகத்திலும் "வ:, யுஷ்மாகம், பவதாம்" என்று முன்னிலையாக வருவதால் ஸ்வார்த்தமாகவன்றிக்கே பரார்த்தமாகவே இதனைப் பாராயணம் செய்யவேணுமென்பது தெரியவருகின்றது. இதனையருளிச்செய்தவர் ஸ்ரீகூரநாராயண ஜீயர் என்பவர், அவர் கூரத்தாழ்வானுடைய திருவடிகளில் ஆச்ரயித்திருந்தவர். கோயிலில் ஸ்ரீரங்க நாராயண ஜீயருடைய ஆஸ்தானத்தையும் அலங்கரித்திருந்தவர் என்பது கோயிலொழுகினால் தெரியவருகின்றது. இவர் ப்ரசண்ட பண்டிதோத்தமர் என்பது தவிர, மஹாகவிகளில் நிகரற்றவர். கவிதையில் கூரத்தாழ்வான் பட்டர் முதலானோரையும் அதிசயித்தவரென்றால் மிகையாகாது. இவ்வளவு சப்தகாம்பீர்யமும் அர்த்தபுஷ்டியுமுள்ள கவிதை வேறில்லையென்று சபதமிட்டுரைக்கலாம்.

இந்த ஸ்துதிநூலை இவ்வாசிரியர் இயற்றுவதன் காரணம் இதற்குத் தனியனாக அமைந்துள்ள சுலோகத்தினால் ஸ்பஷ்டமாகத் தெரியவருகின்றது. *ரங்கேச விஜ்ஞப்தி கராமயஸ்ய சகார சக்ரேசநுதிம் நிவ்ருத்தயே. ஸமாச்ரயேஹம் வரபூரணீம் யஸ் தம் கூரநாராயண நாமகம் முநிம்* என்பது தனியனாக அநுஸந்திக்

கப்படும் சுலோகம். திருவரங்கப் பெருமாளரையருடைய நோய் தீருவதற்காக இந்த ஸ்துதி நூல் இயற்றப்பட்டதாக இந்த சுலோகத்தினால் தெரிவிக்கப்படுகிறது. இவ்வாசிரியர் கூரத்தாழ்வானுடைய திருவடிநிழலில் வாழ்ந்தகாலத்தில் இவர் மந்த்ரசாஸ்த்ரங்களில் விசேஷப் பற்றுடையவராயிருந்தாராம். ஒருநாள் ஆழ்வான் இவரைநோக்கி "ப்ரபந்ந ஸந்தானஸ்தர்களான நமக்கு திருவஷ்டாக்ஷர மஹாமந்த்ரமொழிய வேறு புகலில்லைகாணும்" என்றருளிச்செய்ய 'ஸ்வாமிந்! ஸமயத்தில் இவையும் பயன்படும்' என்று சொல்லிவைத்தாராமிவர்.

ஒரு ஸமயம திருவரங்கப்பெருமாளரையர் மஹத்தானவொரு வியாதியினால் அபிபூதராய் பகவத்கைங்கர்யத்திற்கு அநர்ஹராய் மிகவும் சிரமப்பட்டிருக்க, அப்போது ஆழ்வான் இவரை நோக்கி 'இவையும் ஸமயத்தில் பயன்படுமென்று சொல்லியிருந்தீரே, இப்போது பயன்பெறுவிக்கலாகுமோ?' என்றருளிச்செய்ய, அப்போது இந்த கூரநாரயண ஸ்வாமி இந்த ஸுதர்சநசதகத்தைப்பணித்து அங்கு ஸ்ரீஸுதர்சனாழ்வான் ஸந்நிதியில் யோக்ய புருஷர்களைக்கொண்டு பாராயணம் செய்விக்க, அரையர் விரைவிலேயே நோய் தீர்ந்து பண்டுபோல் கைங்கரியத்தில் அந்வயிக்க, ஆழ்வான் போரவுகந்தருளினார் என்று இவ்வளவும் கோயிலொழுகினால் தெரிய வருவதாம்.

இதில் ஒவ்வொரு சுலோகத்திலும் ஒவ்வொரு பலன் கூறப்படுவது மிக விலக்ஷணமாயிருக்கும். ஒரு சுலோகத்தில் "ஹந்து தந்த்ராலுதாம் வ:" என்கிறார்; உங்களுடைய சோம்பல் தொலையக் கடவதென்றபடி. சோம்பல் தொலைவதற்கும் ஒரு வரப்ரஸாதம் வேண்டும்போலும். இன்னொரு சுலோகத்தில் "வித்தகோடீ கோடீரச்சத்ரபீட கடக கரி கடா சாமரஸ்ரக்விணீம் விபுதாவிஸ்த்ருதிம் வ: விதரது" என்கிறார். இது, பெரிய திருமொழியில் "கண்டார் வணங்கக் களியானை மீதே கடல் சூழுலகுக்கொரு காவலராய், விண்தோய் நெடுவெண்குடை நீழலின் கீழ் விரிநீருலகாண்டு" என்ற பலச்ருதியை அடியொற்றியது. மற்றொரு சுலோகத்தில் "ஸங்க்யாவத் ஸங்கசித்த ச்ரவணஹர குணஸ்யந்தி ஸந்தர்ப்ப கர்ப்பாம் மதிம் வ: தத்தாம்" என்கிறார். ஆசிரியர் தம்முடைய வாக்குப்போன்ற வாக்கு பிறர்க்கும் ஸித்திக்க வேணுமென்று ஆசாஸிக்கிறாரிதில்.

இப்படி ஸகல பலன்களையும் அளிக்க வல்லதாக அமைக்கப்பட்ட இந்தச் சிறந்த ஸ்துதிநூல் அப்ரதிம வாங்மயமாக அமைந்துள்ளது. இதற்குப் பல வருடங்களுக்குமுன்பு அடியேன் மணிப்ரவாள வியாக்கியானமெழுதப் பல பெரியோர்களால் நியமிக்கப்பட்டேன். உண்மையில் வெகு சிரமப்பட்டுத்தானெழுதினேன். ஒரு நாளைக்கு இரண்டொரு சுலோகங்களின் வியாக்கியானமேயெழுத முடிந்தது. இது அச்சாகி வெளிவந்தபோது அஸ்மதாசார்யரான ஸ்ரீ ஜகத்குரு காதி ஸ்வாமி எழுந்தருளியிருந்தார். கடாக்ஷித்தருளி, "பஞ்சஸ்தவ ஸ்ரீரங்கராஜ ஸ்தவாதிகளுக்கு நீ வியாக்கியானமெழுதினது பெரிதன்று; இதற்கு வியாக்கியானமெழுதினது மிக வியக்கத்தக்கது" என்றருளிச்செய்தார். உடனே அடியேன் விண்ணப்பம் செய்தேன்—'ஸத்யம் சபே, இது அடியேனால் எழுத முடியாதது; உண்மையில் அடியேனெழுதியதுமன்று; ஸ்வாமியின் திருவெழுத்தே' என்றேன். இவ்விஷயத்தை அந்த வியாக்கியான முடிவில் இரண்டு சுலோகங்களாக அமைத்திருக்கின்றேன். இந்த வியாக்கியானம் ஐந்து பதிப்பாகியும் நாலைந்து வருஷமாகப் புஸ்தகம் துர்லபமாக ஆறாவது பதிப்பாக இப்போது புநர்முத்ரணம் Hoe & Co உபயமாக நடைபெற்று முடிந்தது. விலை ரூ. 5—00. கிடைக்குமிடம் க்ரந்தமாலா கார்யாலயம்.

# Alleged public disclosure, by Sri Ramanuja, of the holy 'TIRUMANTRA'

[S. SATYAMURTHY AYYANGAR, GWALIOR.]

Quite a few writers have presented a misleading picture of the above-mentioned episode. It has been made out by them that Sri Ramanuja purveyed the precious 'mantra' and its esotoric meaning acquired by him at great personal inconvenience. to all and sundries, the public in general, casually gathered in front of the temple at Tirukkottiyur, hardly eligible to be treated so, literally throwing pearls before swine. This sounds rather reproachful, detracting very much from the greatness of Sri Ramanuja and his generous gesture. The truth of the matter is, however, as follows:—

No doubt, Sri Ramanuja had to visit Tirukkottiyur, a number of times to get himself initiated into the said holy mantra by Ghoshtipurnar (Tirukkottiyur Nambi), a fact corroborated by Sri Parasara Bhattar. in his hymn landing Ghoshtipurnar. That being the case, it is pointed out, in some quarters, that it is highly improbable that Sri Ramanuja would have divulged the secret to many, in such on open manner, in utter disregard of the preceptor's injunction. Well, many ardent Vaishnavite residents of the place, who were watching, with great anguish, Sri Ramanuja making a number of abortive visits to the town, reverently approached him and betrayed their own desperate longing for the hidden treasure of spiritual knowledge. They told the toiling saint :—

> "If even one of your eminence finds it so hard to gain access to the spiritual knowledge of such vital importance, what shall be our lot? There is not the ghost of a chance of our initiation by Nambi. And so, please do not forget to extend the benefit to us, when you eventually get hold of the treasure."

Sri Ramanuja took due note of their ardour. When at long last, he gained access to the sacred knowledge, he asked only those supplicants to assemble, in a body, on the first floor of the temple of Lord Sowmya Narayana and shared with them his new found knowledge. This is borne out by Sri Manavala Mamuni's elucidation of aphorism 204 of 'Acharya Hridayam'. In the said aphorism, the author has said :—

> 'This sense of belonging, non-endurance of the spiritual degeneration of others and boundless compassion for straying humanity

are the unique traits of the Divine Mother (Sita), the illustrious son (Prahlada), the dutiful scion (Vibhishana), Saint Nammalvar and his staunch follower (Sri Ramanuja).

Highlighting Sri Ramanuja's compassion, in this context, Manavala-Mamuni, the glossator, has pointed out how the saint wore himself down, walking up and down Tirukkottiyur, umpteen times and yet shared the secret knowledge, so gained, with the ardent members of a specially constituted assembly (Olakkam or Ghoshti). It is clear from the text of the said commentary that it was not a motley crowd of passers-by, to whom Sri Ramanuja purveyed all that knowledge. Surely, this is not a case of a handful of coins being thrown helter-skelter to be picked up by all and sundries, but one of careful bestowal of rare, esoteric knowledge *unto the ardent seekers* (ஆசையுடையோர்), the prospective beneficiaries.

—*[Adopted from Sri P. B. A. Swami's article]*.

---

## Ramanuja Siddhanta

(D. Ramaswamy Ayyangar, Advocate, Madras).

Historians and modern research scholars tell us that during the centuries that intervened between Sankara and Ramanuja, a wave of Bhakti cult, or the path of devotion, swept over the whole of India. As Ramanuja came into the world after the great Tamilian devotees known as the Azhwars, he laid emphasis on Bhakti (or God-love) as much as on Gnana (or God-knowledge), unlike, Sankara who, in accordance with the genius of his time, had laid stress on Gnana alone as the means of attaining salvation. The concept of God-head also changed, and in the place of the Nirguna (attributeless) Brahman postulated by Sankara, Ramanuja evolved a God of beauteous form and figure, full of all auspicious and good qualities (kalyana gunas) and opposed to evil of every sort (Heyapratibhata). Saguna sruties and Nirguna Sruties were both thus given significance a meaning, nirguna being taken to indicate absence of bad or evil attributes, and not a total absence of attibutes. Brahman now becomes Srinivasa, and one can see the two terms equated with each other even in the very first (the mangala) sloka of Ramanuja's Sri Bhashya (Sutra Bhashya). The Iswara of the Advaita Siddhanta did of course possess qualities and answered somewhat to the description of the Saguna Brahman talked of by the Srutis, but Ramanuja's full-fledged God with a name and a form, and with attributes, all on an eternal basis and not having foundations in illusion, was a more true, a more valid and a vastly more attractive personality. The upasaka was thus presented with a more lovable and gracious God-a personal God, so to say, taking the place of an abstract Brahman.

Consistently with this postulate of the highest Godhead, the Tatwa. Hita and Purushartha were re-stated by Ramanuja by a more appealing form, which satisfied the intellectual quest of the human soul for God, and, at the same time furnished food for that great human emotion, love. Contemplation of God became pleasant and Sadhana Bhakti (Bhakti as means) became as sweet and enjoyable as saadhya Bhakti (Bhakti that is aspired for). It is like asking a patient to take milk and sugar and all the delicacies known to the tongue as a remedy for his disease. The centre was shifted from the "aham" of one's own self, to God, the Highest Self. "Soham" (I am He) gave place to "Daasoham" (I am His servant). Karma (or action) is transmuted into Kainkarya or service to God and godly men, and work is sublimated into worship. Punya (good deeds) and paapa (sin) have no more any merit or demerit in the matter of the spiritual progress of the soul. Both of them are chains that keep one bound in Samsara (the cycle of births and deaths) Punya may be a golden chain and paapa an iron chain, but both are chains. The only true Punya is to strive for union with God every moment of our life, the only Paapa is to forget Him and to think and act as if we are independent of Him. Realising that God alone is the source and sustenance of every individual soul, we entirely yield ourselves up to Him in thought, word and deed, and become Prapannas Our sins classified by Ramanuja in the Saranagati Gadya as Bhagavat-apachara (sins towards God), Bhaagavata-apachara (sins towards His true Devotees), Asahya-apachara (unbearable i e., unpardonable sins) and so on, sins that have been committed, that are being committed, and that may hereafter be committed in thought, word and deed all of them without exception get "scorched like cotton in fire" as stated by an Upanishad and in the fifth verse of Tiruppavai. The Lord's declaration from the Charioteer's seat in Arjuna's Ratha (car) comes true and we are released by His grace from all sins (Sarvapaapebhyah mokshayishyami).

Here certainly is a very sweet and attractive system more appealing to the common man and more within his grasp. In addition to it, the theory evolved is of universal application and is conducive to the well-being and amelioration of all men and communities.

Sareera-Sareeri-bhava or body-soul relationship is the key-stone to Ramanuja's edifice of philosophy, known by the name of Visishtadvaita Siddhanta It means that God sustains, commands, and obtains all benefits from, the individual soul, who in turn is sustained and commanded by God and exists only for him.

God, Man and matter are now organically linked up and united. And each individual soul is therefore a part, however small, of this homogeneously linked up system. The corollaries derivable from this synthesis are numerous, and every one of them leads to the greater happiness and well-being of

man. If all the souls are prakaras or modes of Brahman or Godhead, they being like several parts in the anatomy of the human body, does it not follow that they must all act in unison and work for the welfare of the entire body, and that there can be no room for conflict or quarrel between one man and another, any more than there can be between one part of the body and another? The Visishtadvaita principle of aprthak siddhi (inseparable connection) holds good also in spheres other than the spiritual, and is sure to yield very good and happy results if steadfastly kept in view and steadily brought into practice. Just as there can be no conflict between man and man, there can be no hitch or internecine trouble within groups or associations of men. Taking the family as a unit, the entire family is the soul, as it were, and the members of the family different parts of that family's body. The impartibility of the family is thus emphasised and each member works for the welfare of the whole family. From family to society is the next step. Every member of the society is, so to say, an anga (member) of the society which is the angi or body. If this relationship between the individual and the society is kept in mind, there can be no conflict between the interests of an individual and the interests of the society. And similarly with regard to a state and its citizens, the federation of states and each individual state, between nation and nation, ultimately between international weal and national weal. The harmonious blending and homogenous concept involved in the synthetic body-soul concept is capable of very wide expansion and universal application.

No wonder therefore that Swami Vivekananda, - stalwart Advaitin as he was - paid a high compliment to Ramanuja in the following terms: "Ramanuja, with a most practical philosophy, a great appeal to the emotions, an entire denial of birthrights before spiritual attainments, and appeals through the popular tongue, completely succeeded in bringing the masses back to the Vedic Religion".

Ramanujarya Divyagna Prativasaram Ujjwala,
Digantavyaapinee bhooyat Saa hi lokahitaishinee.
ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா ப்ரதிவாஸரமுஜ்ஜ்வலா |
திகந்தவ்யாபிநீ பூயாத் ஸாஹி லோகஹிதைஷிணீ ||

---

## INSTITUTE OF RAMANUJA PHILOSOPHY

A group of Professors, Doctors and Journalists met at No 13, Mahalakshmi Street, T. Nagar, Madras on 4—7—76 under the presidentship of Chandilyan and after a discussion unanimously agreed to set up an organisation titled "Institute of Ramanuja Philosophy" with the idea of providing research facilities for advanced studies in the Philosophy of Sri Ramanuja and also propagating the ideals of the great Teacher through publication of Journals and Books. A committee was formed to draft the constitution of the aforesaid Institute. *A. THIRUVENGADATHAN, Convener.*

| | |
|---|---|
| சீரிய நால் மறை செம் பொருள் | சிறந்த நால் வேதங்களிலுள்ள செவ்விய பொருள்களை |
| செம் தமிழால் | அழகிய தமிழ்ப் பாசுரங்களினால் |
| அளித்த | அருளிச்செய்தவரும் |
| பார் இயலும் புகழ் | பூமியெங்கும் பொருந்திய புகழையுடையவருமான |
| பாண் பெருமாள் | திருப்பாணாழ்வாருடைய |
| சரண் ஆம் பதுமம் தார் இயல் சென்னி | திருவடிகளாகிற தாமரைப் பூவாலே அலங்கரிக்கப்பட்ட திருமுடியையுடையரான |
| இராமாநுசன் தன்னை | எம்பெருமானாரை |
| சார்ந்தவர் தம் | ஆச்ரயமாகப் பற்றினவர்களுடைய |
| காரியம் வண்மை | அநுஷ்டாந வைலக்ஷண்யமானது |
| இக்கடல் இடத்து | கடல் சூழ்ந்த இப்பூமியில் |
| என்னால் சொல்ல ஒணாது | (இப்படிப்பட்ட வைபவமுடையதென்று) என்னால் சொல்லித் தலைக்கட்ட முடியாதது. |

* * * — எம்பெருமானுடைய ஸ்வரூப ரூபகுண விபூதிகளையெல்லாம் விசதமாகப் பேசுகையாலே சிறந்தவையான நால்வேதங்களில் பொதிந்து கிடக்கும் நற்பொருள்களை "அமலனாதிபிரான்" என்னும் திவ்ய ப்ரபந்தத்தில் சுருக்கி அருளிச் செய்தவராய் நாடெங்கும் பரவின புகழையுடையரான திருப்பாணாழ்வாருடைய சரணாரவிந்தங்களாலே அலங்கரிக்கப்பட்ட திருமுடியை யுடையவரான எம்பெருமானாரை அடிபணிந்தவருடைய ஆசார வைலக்ஷண்யமானது என் வாய் கொண்டு வருணிக்க முடியாதபடி மிகவும் சிறந்தது என்றாராயிற்று.

**சரண்** — சரணமென்ற வடசொற் சிதைவு. **பதுமம்** — பத்மமென்ற வடசொல் விகாரம். **தார்**—மாலைக்கும் பூவுக்கும் பெயர் ; இங்கே பூவைச்சொல்லும். நான்காமடியில், **"காரியல் வண்மை"** என்ற பாடமும் உண்டு ; **கார்** என்று மேகமாய், மேகங்கள் ஜல ஸ்தல விபாகம் பாராமல் நாடெங்கும் பரந்து தண்ணீரை வர்ஷித்து உபகரிக்குமாபோலே உலகமெல்லாந் திரிந்து ரஹஸ்யமான அர்த்தங்களைப் பொழிந்து நல்ல உபதேசங்களைச் செய்யுமவர்கள் இராமாநுசனடியார் என்றதாகிறது. 11

**இடங்கொண்ட கீர்த்தி மழிசைக்கிறைவன்* இணையடிப்போ**
**தடங்குமிதயத் திராமாநுசன்* அம்பொற்பாத மென்றுங்**
**கடங்கொண் டிறைஞ்சும் திருமுனிவர்க்கன்றிக் காதல்செய்யாத்**
**திடங்கொண்ட ஞானியர்க்கே* அடியேனன்பு செய்வதுவே.** 12

| | |
|---|---|
| இடம் கொண்ட கீர்த்தி | பூமியெங்கும் வியாபித்த கீர்த்தியையுடையரான |
| மழிசைக்கு இறைவன் | திருமழிசைப்பிரானுடைய |
| இணை அடி போது | உபயபாதாரவிந்தங்கள் |
| அடங்கும் இதயத்து | குடிகொண்டிருக்கப்பெற்ற திருவுள்ளத்தையுடையரான |
| இராமாநுசன் | எம்பெருமானாருடைய |
| அம் பொன் பாதம் | மிகவும் அழகிய திருவடிகளை |
| என்றும் | எக்காலத்திலும் |
| கடம் கொண்டு இறைஞ்சும் திரு | இதுவே நமக்கு ஸ்வரூபமென்கிற புத்தியோடே ஆச்ரயிக்கையாகிற செல்வத்தையுடையரான |
| முனிவர்க்கு அன்றி | மஹான்களுக்குத் தவிர மற்றவர்களுக்கு |
| காதல் செய்யா | அன்பு பூண்டிராத |
| திடங்கொண்ட ஞானியர்க்கே | மிக்க உறுதியுடையரான ஞானிகளுக்குத்தான் |
| அடியேன் அன்பு செய்வது | அடியேன் பக்தனாயிருப்பேன். |

* * *—உலகமெங்கும் பரவின புகழையுடையரான திருமழிசைப்பிரானுடைய பாதாரவிந்தங்கள் அடங்கியிருக்கப்பெற்ற திருவுள்ளத்தை யுடையரான

எம்பெருமானாருடைய திருவடித்தாமரைகளை ஸ்வரூப ப்ராப்தத்வ புத்தியோடே அநவரதம் ஆச்ரயிக்கின்ற மஹா பாகவதர்கட்குத் தவிர வேறொருவர்க்கும் விதேயப்படாத மாஞானிகளுக்கே அடியேன் அன்பனாயிருப்பன் என்கிறார். இப்பாட்டால், 'ஸ்ரீராமாநுஜ பக்த பக்த பக்தன் அடியேன்' என்றாராயிற்று.

**கடங்கொண்டு**—கடமையாகக்கொண்டு. ... ... ... 12

**செய்யும் பசுந்துளவத் தொழின்மாலையும்* செந்தமிழிற்**
**பெய்யும் மறைத்தமிழ்மாலையும்* பேராத சீரரங்கத்**
**தையன் கழற்கணியும் பரன்தாளன்றி ஆதரியா**
**மெய்யன்* இராமாநுசன் சரணேகதி வேறெனக்கே.** 13

| | |
|---|---|
| செய்யும் | (தொண்டரடிப்பொடியாழ்வாராகிற தம்மாலே) செய்யப்பட்டதாய் |
| பசும் துளவம் | பசுமை தங்கிய திருத்துழாய் மயமாய் |
| தொழில் | வேலைப்பாடுகளையுடைத்தான |
| மாலையும் | பூமாலைகளையும் |
| செம் தமிழில் | அழகிய தமிழ்ப் பாஷையிலே |
| பெய்யும் | உண்டாக்கப்பட்டதாய் |
| மறை | வேதஸத்ருசமான |
| தமிழ் மாலையும் | திருமாலை திருப்பள்ளியெழுச்சியென்கிற திவ்ய ப்ரபந்தங்களாகிற சொல் மாலைகளையும் |

| | |
|---|---|
| பேராத சீர் அரங்கத்து ஐயன்கழற்கு அணியும் | நித்யஸித்தமான கல்யாண குணங்களையுடையரான ஸ்ரீரங்கநாதனுடைய திருவடிகளிலே சாத்தினவரான |
| பரன் | தொண்டரடிப்பொடியாழ்வாராகிற பெரியவருடைய |
| தாள் அன்றி ஆதரியா | திருவடிகளைத் தவிர மற்றொன்றையும் விரும்பாத |
| மெய்யன் | ஸத்யசீலரான |
| இராமாநுசன் | எம்பெருமானாருடைய |
| சரணே | திருவடிகளே |
| எனக்கு | அடியேனுக்கு |
| வேறு கதி | விலக்ஷணமான ப்ராப்ய வஸ்துவாம். |

* * *—தொண்டரடிப்பொடியாழ்வார் திருவடிகளையன்றி மற்றொன்றில் ஆதரம் அற்றிருக்கிற எம்பெருமானார் திருவடிகளே நமக்குச் சரணமென்கிறார் இதில்.

தொண்டரடிப் பொடியாழ்வார் ஸ்ரீரங்கநாதன் திருவடிகளில் இரண்டு மாலைகளைச்செய்து ஸமர்ப்பித்தனரென்று சாடூக்தியாகச் சொல்லுகிறார் அமுதனார். ''துளபத்தொண்டாய தொல்சீர்த் தொண்டரடிப்பொடி'' என்றும், ''தொடையொத்த துளபமும் கூடையும் பொலிந்து தோன்றிய தோள் தொண்டரடிப்பொடி'' என்றும், தாமே அருளிச்செய்தபடிக்குப் பொருந்தத் திருத்துழாய் மாலைகளையும், திருமாலை திருப்பள்ளியெழுச்சி யென்கிற திவ்ய ப்ரபந்தங்களாகிற சொல்மாலைகளையும் அரங்கத்தையன் கழல்களிலே ஸமர்ப்பித்தவரிறே தொண்டரடிப்பொடியாழ்வார்.

''துளபத்தெழில் மாலையும்'' என்றும் சிலர் பாடங்கூறுவர்; **துளபத்து**—துளஸியினாலாகிய, **எழில் மாலை**—அழகிய மாலை என்றபடி. இப்பாடம் அழகியதேயாயினும் வியாக்கியானத்தில் ஆதரிக்கப்பட்ட பாடமன்றாதலால் உபேக்ஷிக்கத் தக்கதென்க. ... ... ... ... ... 13

**கதிக்குப்பதறி* வெங்கானமுங் கல்லுங் கடலுமெல்லாம்**
**கொதிக்கத் தவஞ்செய்யுங் கொள்கையற்றேன்* கொல்லி காவலன்சொல்**
**பதிக்குங்கலைக் கவிபாடும் பெரியவர் பாதங்களே**
**துதிக்கும்பரமன்* இராமாநுசனென்னைச் சோர்விலனே.** 14

| | | | |
|---|---|---|---|
| **கொல்லி காவலன்** | குலசேகரப் பெருமாளாலே அருளிச் செய்யப்பட்டதாய் | என்னை சோர்விலன் | என்னை விட்டு நீங்குகிறில்லை; (ஆதலால்) |
| **கலை சொல் பதிக்கும்** | சாஸ்திரச்சொற்கள் அமையப்பெற்றதான | கதிக்கு பதறி | ப்ராப்ய லாபத்துக்காக விரைந்து |
| **கவி** | பெருமாள் திருமொழிப் பாசுரங்களை | வெம் கானமும் கல்லும் | அத்யுஷ்ணமான காடுகளிலும் மலைகளிலும் |
| பாடும் பெரியவர் | பாடுகின்ற பெரியோர்களது | கடலும் | கடல்களிலும் (நின்று கொண்டு |
| பாதங்களே | திருவடிகளையே | எல்லாம் கொதிக்க | எல்லா அவயவங்களும் கொதிக்கும்படியாக |
| துதிக்கும் | ஸ்தோத்ரம் செய்பவராய் | தவம் செய்யும் கொள்கை | தபஸ்ஸு பண்ணும் ஸ்வபாவத்தை |
| பரமன் | உத்க்ருஷ்டரான | அற்றேன் | விட்டொழித்தேன். |
| இராமாநுசன் | எம்பெருமானார் | | |

* * *—ஸகல சாஸ்த்ரங்களின் ஸாரப்பொருள்களையும் திரட்டி ஸ்ரீ குலசேகரப்பெருமாள் அருளிச்செய்த **பெருமாள் திருமொழி** யென்னுந் திவ்யப்ரபந்தத்தை அநுஸந்திக்கின்ற பெரியவர்களது திருவடிகளையே போற்று மியல்வினரான எம்பெருமானார் வந்து தாமே என்னை ஸ்வீகரித்தாராதலால் இனி ஒருநாளும் அவர் அடியேனைக் கைவிடமாட்டார்; ஆனபின்பு நமக்கு ப்ராப்யம் வேறு ஒன்று மில்லாமையாலே, வநபர்வத ஸமுத்ர தீரங்களில் நின்று க்ரூரமாகச் செய்யும் தவங்களில் இனி எனக்கு அந்வயமில்லை யென்றுராயிற்று.

''எல்லாங் கொதிக்கத் தவஞ்செய்யுங் கொள்கை'' என்றதற்கு—இவனுடைய தவத்தின் கொடுமையைக் கண்டு கானமும் கல்லும் கடலும் பரிதபிக்கும்படியாக அந்தந்த ஸ்தலங்களிலே நின்று தபஸ்ஸுபண்ணும் ஸ்வபாவம் என்று பொருள் கூறுவாருமுளர்.

**சோர்வு இலன்**—பிரிவிலன் என்றபடி. ... ... ... 14

**சோராதகாதல் பெருஞ்சுழிப்பால்* தொல்லைமாலை யொன்றும்**
**பாராதவனைப் பல்லாண்டென்று காப்பிடும்* பான்மையன்தாள்**
**பேராத வுள்ளத் திராமாநுசன்றன் பிறங்கியசீர்**
**சாராமனிசரைச் சேரேன்* எனக்கென்ன தாழ்வினியே? 15**

| | | | |
|---|---|---|---|
| சோராத காதல் பெரு சுழிப் பால் | ஒருநாளும் குறைவுபடாத ப்ரேமத்தில் பெருஞ்சுழிப் படுகையாலே | தாள் பேராத உள்ளத்து | திருவடிகள் விட்டகலாத திருவுள்ளத்தையுடையரான |
| தொல்லை மாலை ஒன்றும் பாராது | நித்யனான எம்பெருமான் படியைச் சிறிதும் நிரூபியாமல் | இராமாநுசன் தன் | எம்பெருமானாருடைய |
| | | பிறங்கிய சீர் | மிக்க திருக்குணங்களை |
| அவனை | அவ்வெம்பெருமானை நோக்கி | சாரா | தங்களுக்கு அநுபாவ்யமாகக் கொள்ளாத |
| | | மனிசரை | மநுஷ்யர்களை |
| பல்லாண்டு என்று காப்பிடும் பான்மையன் | பல்லாண்டு பல்லாண் டென்று மங்களாசாஸநம் பண்ணுகையையே நித்ய ஸ்வபாவமாக வுடையரான பெரியாழ்வாருடைய | சேரேன் | பற்றமாட்டேன்; |
| | | இனி | இப்படிப்பட்ட உறுதி பிறந்த பின்பு |
| | | எனக்கு என்ன தாழ்வு | அடியேனுக்கு என்னகுறை? |

* * *—பாண்டியராஜனுடைய பண்டித ஸபையில் எழுந்தருளி ''எம்பெருமானே பரதத்துவம்'' என்று ஸ்தாபநம் செய்து கிழியறுத்துவிட்ட காலத்து, அப்பாண்டியன் தம்மை யானைமேலேற்றி ஊர்வலம் வருவிக்கையில் தம் வைபவத்தைக்

காணவந்து ஆகாசத்திலே கருடாரூடனாய் நின்ற திருமாலைச் சேவித்து அப்பெருமானிடத்துள்ள பெருங்காதலாலே ரக்ஷ்யபூதரான தம்மையும் ரக்ஷகனான அவனையும் மறந்து, தம்மை ரக்ஷகராகவும் அவனை ரக்ஷ்யனாகவு மெண்ணி அவனுக்குப் ''பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்'' டென்று தொடங்கி மங்களாசாஸநம் செய்தருளின பெரியாழ்வாருடைய திருவடிகளையே அநவரதம் தியானித்தருளும் எம்பெருமானாருடைய குணங்களைச் சிந்திக்ககில்லாத மனிசரோடு நான் ஸஹவாஸம் செய்யமாட்டேன்; இந்நினைவு பிறந்தபின் இனி எனக்கு ஒரு குறையுமில்லை—என்றாராயிற்று.

முன்னிரண்டடிகளிற் குறிக்கப்பட்டுள்ள சரிதையின் விரிவு பெரியாழ்வார் வைபவத்திற் காணத்தக்கது.

**பிறங்கியசீர்**—அளவற்ற குணங்கள் என்னவுமாம்; ப்ரகாசமான குணங்கள் என்னவுமாம். ... ... ... ... ... 15

**தாழ்வொன்றில்லா மறைதாழ்ந்து* தலமுழுதுங் கலியே**
**ஆள்கின்றநாள் வந்தளித்தவன் காண்மின்* அரங்கர்மௌலி**
**சூழ்கின்ற மாலையைச் சூடிக்கொடுத்தவள் தொல்லருளால்**
**வாழ்கின்றவள்ளல்* இராமாநுச னென்னும் மாமுனியே.** 16

| | |
|---|---|
| அரங்கர் மௌலி சூழ்கின்ற மாலையை | ஸ்ரீரங்கநாதனுடைய திருமுடியிலே சாத்தக்கடவதான பூமாலையை |
| சூடிக் கொடுத்தவள் | தனது திருக்குழலிலே அணிந்து வாஸிதமாக்கிக் கொடுத்தவளான ஆண்டாளுடைய |
| தொல் அருளால் வாழ்கின்ற வள்ளல் | அவ்யாஜமான அருளாலே வாழ்பவரும் உதாரருமான |
| இராமாநுசன் என்னும் மா முனி | ஸ்ரீராமாநுஜ முனியானவர் (எப்படிப்பட்டவரென்றால்) |
| தாழ்வு ஒன்று இல்லா மறை | ஒரு குறையுமில்லாதிருந்த வேதமானது |
| தாழ்ந்து | (குத்ருஷ்டிகளாலே) இழிவு பெற |
| தலம் முழுதும் | பூமியெங்கும் |
| கலியே ஆள்கின்ற நாள் | கலியே ஸாம்ராஜ்யம்பண்ணுகிற காலத்திலே |
| வந்து | இங்கே வந்தவதரித்து |
| அளித்தவன் காண்மின் | (அந்த வேதத்தை உத்தரிப்பித்து உலகத்தை) ரக்ஷித்தருளினவர். |

***—ப்ரமாணங்களிற் சிறந்து உத்துங்கமாயிருந்த வேதமானது பாஹ்ய குத்ருஷ்டிகளால் தாழ்வுபெற்றுக் கலிபுருஷனே செங்கோல் செலுத்திக் கிடந்த காலத்திலே வந்து திருவவதரித்தருளி அக்கலியைக்கெடுத்து வேதத்தை நிலைநிறுத்தின மஹாநுபாவர் காண்மின் எம்பெருமானார்.

அரங்கர்மௌலி சூழ்கின்ற மாலையைச் சூடிக்கொடுத்த வரலாறு ஆண்டாள் வைபவத்திற் காணத்தக்கது. சூடிக்கொடுத்த நாச்சியாருடைய பரமக்ருபைக்குப் பாத்ரபூதர் எம்பெருமானார் என்றதாயிற்றுப் பின்னடிகளால். ... 16

**முனியார்துயரங்கள் முந்திலும்* இன்பங்கள் மொய்த்திடினுங்**
**கனியார்மனம் கண்ணமங்கை நின்றானை* கலைபரவும்**
**தனியானையைத் தண்டமிழ்செய்த நீலன்றனக் குலகி**
**லினியானை* எங்க ளிராமாநுசனை வந்தெய்தினரே.** 17

| | | | |
|---|---|---|---|
| கலை பரவும் தனி ஆனையை | ஸகல சாஸ்த்ரங்களாலும் துதிக்கப்படுகிற அத்விதீயமான மத்தகஜம் போன்ற | இனியானை | ப்ரேமமுடையவராய் |
| கண்ணமங்கை நின்றானை | திருக்கண்ண மங்கையிலே நிற்கும் பக்தராவிப் பெருமாளைக் குறித்து | எங்கள் | எங்களுக்குத் தலைவரான |
| உலகில் | இவவுலகில் | இராமாநுசனை | எம்பெருமானாரை |
| தண் தமிழ் செய்த | ஸம்ஸார தாபஹரமான திவ்யப்ரபந்தத்தைச் செய்தருளின | வந்து எய்தினர் | வந்து பணிந்த மஹான்கள் |
| நீலன் தனக்கு | திருமங்கையாழ்வார் பக்கல் | துயரங்கள் முந்திலும் முனியார் | தாபத்ரயம் செறிந்தாலும் வருத்தப்பட மாட்டார்கள்; |
| | | இன்பங்கள் மொய்த்திடினும் மனம் கனியார் | ஸுகங்கள் செறிந்தாலும் களிப்படையமாட்டார்கள். |

***—ஸகல சாஸ்த்ர ப்ரதிபாத்யனான எம்பெருமானைத் தம்முடைய திவ்யப்ரபந்தங்களிலே அமைத்துப் பாடின திருமங்கை யாழ்வார்க்கு அந்தரங்க பக்தரான எம்பெருமானாரை ஆச்ரயித்த மஹான்கள் ஸுகதுக்கங்கள் மேலிடுங்காலத்தில் மற்ற ஸம்ஸாரிகளைப்போல் ஹர்ஷ சோகங்களை யடையாமல் எவ்வித விகாரமும் அற்றிருப்பர்கள்; நீங்களும் ஹர்ஷ சோகங்களில் கலங்கவேண்டா என்றபடி.

‘‘துயரங்கள் முந்திலும் முனியார், இன்பங்கள் மொய்த்திடினும் மனங்கனியார்’’—‘‘களிப்புங் கவர்வுமற்று’’ என்று ஆழ்வாரருளிச்செய்தபடியே நிர்விகாரராயிருப்பவர்கள் என்கை. ஒரு காலணா கையில் கிடைத்துவிட்டால் தலை நாறிப்போவதும், ஒற்றைக்காசை இழந்துவிட்டால் நிலைகலங்கிப் போவதுமாயிறே ஸம்ஸாரிகளின்படியிருப்பது; ஸ்ரீராமாநுஜ பக்தர்கள் அப்படி இருக்கமாட்டார்கள்; ஸுகம் வந்தகாலத்தும் துக்கம் வந்தகாலத்தும் ஒருபடிப்பட்ட மனநிலையை யுடையராகவே யிருப்பர்கள் என்றவாறு.

**கண்ணமங்கை நின்றானை**—திருக்கண்ண மங்கையைச் சொன்னது மற்றுள்ள எல்லாத் திருப்பதிகட்கும் உபலக்ஷணம்; பல திருப்பதிகளிலும் புக்குக் கவிபாடின கலியன் என்றபடி. **நீலன்**—திருமங்கையாழ்வாருடைய திருநாமங்களில் ஒன்று. 17

**எய்தற்கரிய மறைகளை* ஆயிர மின்தமிழால்**
**செய்தற்குலகில் வருஞ் சடகோபனை* சிந்தையுள்ளே**
**பெய்தற்கிசையும் பெரியவர் சீரை யுயிர்களெல்லாம்**
**உய்தற் குதவும்* இராமாநுசனெம் உறுதுணையே. 18**

| | | | |
|---|---|---|---|
| எய்தற்கு அரிய மறைகளை | அதிகரிக்க முடியாத (அளவற்ற) வேதங்களை | பெரியவர் | ஸ்ரீமதுரகவிகளுடைய |
| இன் தமிழ் ஆயிரத்தால் | இனிய தமிழாகிய ஆயிரம் பாசுரங்களினால் | சீரை | ஜ்ஞாநாதி குணங்களை |
| செய்தற்கு உலகில் வரும் | அருளிச்செய்வதற்காக இவ்வுலகில் வந்துதித்த | உயிர்கள் எல்லாம் உய்தற்கு உதவும் | ஸகலாத்மாக்களும் உஜ்ஜீவிக்குமாறு உபகரித்தருளா நிற்கிற |
| சடகோபனை | நம்மாழ்வாரை | | |
| சிந்தை உள்ளே | தமது ஹ்ருதயத்தினுள்ளே | இராமாநுசன் | எம்பெருமானார் |
| பெய்தற்கு இசையும் | த்யானிப்பதற்கு இணங்கின | எம் உறு துணை | எமக்கு உற்றதுணை. |

***—எம்பெருமானார் தாம் நமக்கு உற்றதுணை. அவர் எப்படிப்பட்டவரென்னில், ஸ்ரீமதுரகவிகளுடைய திருக்கல்யாண குணங்களைப் பரக்க உபந்யஸித்தருளி ஸகலாத்மாக்களையும் உஜ்ஜீவிக்கச் செய்பவர்; அந்த மதுரகவிகள் எப்படிப்பட்டவர்;—நம்மாழ்வாரையே ஸர்வகாலமும் ஹ்ருதயத்திலே வைத்துச் சிந்திப்பவர். அவ்வாழ்வார் எப்படிப்பட்டவர்?-அநந்தங்களாகையாலே அத்யயநம்

செய்வதற்கு அரியவையானவேதங்களிற் பொதிந்து கிடக்கும் ஸாரப்பொருள்களை இனிய தமிழ்ப் பாசுரங்களாலே வெளியிட்டருள்வதற்காக இந்நிலத்தே திருவவதரித்தவர்.

வேதந் தமிழ்செய்த மாறன் சடகோபனையே வாழ்த்தும் ஸ்ரீ மதுரகவிகளின் பக்தரான எம்பெருமானார் நமக்கு உற்றதுணை யென்றாராயிற்று. இப்பாட்டில் ஸ்ரீமதுரகவிகள் **பெரியவர்** என்று சிறப்பித்துக் கூறப்பட்டமை நோக்கத்தக்கது. ''புவியு மிருவிசும்பும் நின்னகத்த, நீ யென் செவியின் வழிபுகுந்து என்னுள்ளாய் அவிவின்றி, யான் பெரியன் நீ பெரியை யென்பதனை யாரறிவார், ஊன்பருகு நேமியாயுள்ளு'' [பெரிய திருவந்தாதி] என்று பெரிதான பரப்ரஹ்மத்தை உள்ளடக்கின பெரியவரையும் [நம்மாழ்வாரையும்] உள்ளடக்கின பெரியவரிறே மதுரகவிகள். ... ... ... ... ... 18

**உறுபெருஞ் செல்வமுந் தந்தையுந் தாயும்* உயர்குருவும்**
**வெறிதருபூமகள் நாதனும்* மாறன் விளங்கியசீர்**
**நெறிதருஞ் செந்தமிழாரணமே யென்றிந் நீணிலத்தோர்**
**அறிதர நின்ற* இராமாநுச னெனக் காரமுதே.** 19

| | |
|---|---|
| உறு பெரு செல்வமும் | சிறந்த பெரிய ஸம்பத்தும் |
| தந்தையும் தாயும் | மாதா பிதாக்களும் |
| உயர் குருவும் | ஸதாசார்யனும் |
| வெறி தரு பூமகள் நாதனும் | மணம் மிக்க பூவைப் பிறப்பிடமாக வுடைய பெரிய பிராட்டியாருக்குக் கொழுநனை ஸர்வேச்வரனும் (ஆகிய எல்லாம்) |
| மாறன் விளங்கிய சீர்நெறி தரும் செம் தமிழ் ஆரணமே என்று | நம்மாழ்வார் (தமக்கு) ப்ரகாசித்த பகவத் குணங்களின் அடைவே அருளிச்செய்த செந்தமிழ் வேதமே யென்று |
| இ நீள் நிலத்தோர் அறிதர நின்ற | இப்பெரிய உலகிலுள்ளார் யாவரும் அறியும்படி நின்ற |
| இராமாநுசன் | எம்பெருமானார் |
| எனக்கு | அடியேனுக்கு |
| ஆர் அமுது | பரம போக்யர், |

***—எம்பெருமானார் தாம் நமக்குப் பரமபோக்யர்; அவர் எப்படிப்பட்டவரென்னில்;—'நம்மாழ்வாரருளிச்செய்த திருவாய்மொழிதான் நமக்கு ஸர்வஸ்வம்' என்கிற அத்யவஸாய முடையவர். அன்னவர் திறத்து அடியேன் அநந்ய போக்யத்வ புத்தியை யுடையேன் என்றாராயிற்று.

**''மாதா பிதா யுவதய:''** என்ற ச்லோகத்தினால் ஆளவந்தார் நம்மாழ்வாருடைய திருவடிகளையே ஸர்வஸ்வமாகக் கொண்டபடி சொல்லிற்று; இப்பாட்டால், எம்பெருமானார் நம்மாழ்வாருடைய ஸ்ரீஸூக்திகளை ஸர்வஸ்வமாகக் கொண்டபடி சொல்லுகிறது.

**மாறன் விளங்கிய சீர்நெறிதரும் செந்தமிழாரணம்**—திருவாய் மொழியில் ஒவ்வொரு திருவாய்மொழியிலும் எம்பெருமானுடைய ஒவ்வொரு திவ்யகுணத்தை வெளியிட்டிருக்கிறார்; அது வெளியிட்டவாறு என்னென்னில், எம்பெருமான் ஆழ்வார்க்கு எந்த க்ரமமாகக் குணங்களை அநுபவிப்பித்தானோ அந்த க்ரமமாகவே இவர் வெளியிட்டாரென்க. ... ... ... ... 19

**ஆர்ப்பொழில் தென்குருகைப்பிரான்* அமுதத் திருவாய்**
**ஈரத்தமிழி னிசையுணர்ந்தோர்கட்கு* இனியவர்தஞ்**
**சீரைப்பயின்றுய்யுஞ் சீலங்கொள் நாதமுனியை நெஞ்சால்**
**வாரிப்பருகும்* இராமாநுசனென்றன் மாநிதியே.** 20

| | |
|---|---|
| ஆரம் பொழில் | சந்தனச் சோலைகளையுடைய |
| தென் குருகை | அழகிய திருக்குருகூரிலே (அவதரித்த) |
| பிரான் | மஹோபகாரமான ஆழ்வாருடைய |
| அமுதம் திருவாய் | பரமபோக்யமான திருப்பவளத்தில் பிறந்த |
| ஈரம் தமிழின் இசை | ஈரச் சொல்லாகிய திருவாய்மொழியின் இசையை |
| உணர்ந்தோர்கட்கு | அறிந்தவர்களுக்கு |
| இனியவர் தம் | இஷ்டர்களாயிருப்பவர்களுடைய |
| சீரை | குணங்களை |
| பயின்று | அப்யஸித்து |
| உய்யும் சீலம் கொள் | ஸத்தை பெறும் சீலத்தையுடையரான |
| நாதமுனியை | நாதமுனிகளை |
| நெஞ்சால் | தம் திருவுள்ளத்தாலே |
| வாரி பருகும் | அபிநிவேசத்தோடு அனுபவிக்கின்ற |
| இராமாநுசன் | எம்பெருமானார் |
| என் தன் மா நிதி | எனக்கு அக்ஷயமான நிதி. |

***—எம்பெருமானார் தாம் நமக்கு அக்ஷயமான தனம்; அவர் எப்படிப் பட்டவர்?—ஸ்ரீமந் நாதமுனிகளை ஹ்ருதயத்திலே வைத்துப் பரம ப்ரேமத்துடனே சிந்திப்பவர். அந்த நாதமுனிகள் எப்படிப்பட்டவர்?—நம்மாழ்வாருடைய அதி மதுரமான திருவாய்மொழியை காநம் முதலிய ஸகல லக்ஷணங்களோடும் அறிந்தவர்கள் விஷயத்தில் ப்ரீதியையுடையார் யாரோ, அவர்களுடைய குணங்களை யநுஸந்தித்து உஜ்ஜீவிப்பவர். ... ... ... ... 20

**நிதியைப்பொழியும் முகிலென்று* நீசர்தம் வாசல்பற்றித்**
**துதிகற்றுலகிற் றுவள்கின்றிலே னினி* தூய்நெறிசேர்**
**எதிகட்கிறைவன் யமுனைத் துறைவ னிணையடியாம்**
**கதிபெற்றுடைய* இராமாநுச னென்னைக் காத்தனனே. 21**

| | |
|---|---|
| தூய்நெறி சேர் எதிகட்கு | பரிசுத்தமான அனுட்டானமுடைய யதிகளுக்கு |
| இறைவன் | தலைவரான |
| யமுனைத் துறைவன் | ஆளவந்தாருடைய |
| இணை அடி ஆம் கதி | உபய பாதங்களாகிற ப்ராப்யத்தை |
| பெற்று | பெற்று (அதனாலே) |
| உடைய | உலகத்தார்க்கெல்லாம் ஸ்வாமியாயிருக்கிற |
| இராமாநுசன் | எம்பெருமானார் |
| என்னை காத்தனன் | என்னை ரக்ஷித்தருளினார்; (ஆன பின்பு) |
| இனி | இனிமேல், |
| நிதியை பொழியும் முகில் என்று | "நிதிகளை வர்ஷிக்கிற மேகமே!" என்று |
| துதி கற்று | ஸ்தோத்திரங்களைப் பண்ணிக்கொண்டு |
| உலகில் | இவ்வுலகத்தில் |
| நீசர் தம் | நீசராயிருப்பவருடைய |
| வாசல் பற்றி | வாசலைப் பற்றிநின்று |
| துவள்கின்றிலேன் | வருந்தமாட்டேன். |

***—நேற்றுவரையிலும் நான் கண்டபேர்களுடைய வாசற் கடைகளிலும் போய் நின்று வாயைக்காட்டி வயிற்றைக்காட்டி "மஹாநிதிகளைப் பொழிகின்ற மேகமே!" என்று பொய்யான நரஸ்துதிகளைச் செய்து துவண்டேன்; இன்று முதல் எந்நாளும் இனி நான் அவ்வாறு துவளமாட்டேன்; ஒரு நீசனுடைய வாசலையும் பற்றமாட்டேன்.

அமுதனாரே! இன்று உமக்கு வந்த அதிசயம் என்ன?; இன்று உமக்குச் செல்வம் விஞ்சியதோ? எத்தாலே நீர் இங்ஙனே மார்பு தட்டிச் சொல்லுகிறீர்?

இன்று நான் எம்பெருமானாருடைய ஸம்ரக்ஷணைக்கு ஆளாய் விட்டேன்; அவரோ, எதிகளுக்குத் தலைவரான ஆளவந்தாருடைய ஸம்ரக்ஷணையைப் பெற்று

உய்ந்தவர். அன்னவராலே ஸம்ரக்ஷிக்கப் பேற்றேனானபின்பு இனிநான் ஏதுக்காக ஒருநீசன் வாசலைப் பற்றித் துவளவேண்டும்!; துவள்கின்றிலேனினி. ... 21

**கார்த்திகையானுங் கரிமுகத்தானும்* கனலும் முக்கண்**
**மூர்த்தியும் மோடியும் வெப்பும் முதுகிட்டு* மூவுலகும்**
**பூத்தவனேயென்று போற்றிட வாணன் பிழைபொறுத்த**
**தீர்த்தனையேத்தும்* இராமாநுச னென்றன் சேமவைப்பே.** 22

| | | | |
|---|---|---|---|
| கார்த்திகை யானும் | ஸுப்ரஹ்மண்யனும் | மூ உலகும் பூத்தவனே என்று போற்றிட | ''மூன்று உலகங்களையும் திருநாபிக் கமலத்திலே உண்டாக்கின பெருமானே!'' (என்னைக் காத்தருள்) என்று போற்ற |
| கரிமுகத்தானும் | கணபதியும் | | |
| கனலும் | (அவர்களுக்குத் துணையாய் வந்த) அந்நியும் | | |
| முக்கண் மூர்த்தியும் | சிவனும் | வாணன் பிழை பொறுத்த | (அந்த) பாணாஸுரனுடைய அபராதத்தை க்ஷமித்தருளின |
| மோடியும் | துர்க்கையும் | தீர்த்தனை | பாவநனான ஸர்வேச்வரனை |
| வெப்பும் | ஜ்வரதேவதையும் | ஏத்தும் | நித்யம் துதிக்கின்ற |
| முதுகு இட்டு | முதுகுகாட்டி ஓடிப்போன பின்பு (அநந்யகதியான பாணாஸுரனானவன் | இராமாநுசன் | எம்பெருமானார் |
| | | என் தன் சேமம் வைப்பு | எனக்கு ஆபத்தநம். |

***—[ஐச்வர்யம் சங்கராதிச்சேத் ஆரோக்யம் பாஸ்கராத் ததா] சிவன் பக்கல் செல்வம்பெற விரும்பவேண்டும்; ஸூர்யன் பக்கல் ஆரோக்யம் பெற விரும்பவேண்டும்] என்று ஸாமாந்யமாகச் சிலர் சொல்லுவதுண்டே; அதனைக்கொண்டு ஒருவன் அமுதனாரை நோக்கி 'ஓய்! நீர் எம்பெருமானாரைப் பற்றினால் உம்முடைய தாரித்ரியம் நீங்குமோ? சிவனைப் பற்றினாலன்றோ செல்வம் மிகும்' என்று கூற; அந்தச் சிவன்பட்ட பரிபவங்களை விளக்கும் ஒரு இதிஹாஸத்தைப் பரக்கப் பேசிக்கொண்டு, 'எம்பெருமானார்தாம் எனக்கு ஆபத்தனம்' என்கிற திண்ணிய அத்யவஸாயத்தை உறுத்திக் கூறுகின்றார் இதில்.

பலிசக்ரவர்த்தியின் ஸந்ததியிற் பிறந்தவனான பாணாஸுரன் ஒரு காலத்தில் சிவபிரானது நடனத்தைக்கண்டு அதற்குத் தனது இரண்டு கைகளால் மத்தளந் தட்ட, சிவபெருமான் அருள்கூர்ந்து அவனுக்கு ஆயிரங் கைகளையும் நெருப்பு மதிளையும் அளவிறந்த வலிமையையும் மிக்க செல்வத்தையும் தான் தனது பரிவாரங்களோடு அவன் மாளிகை வாசலிற் காவல்செய்திருத்தல் முதலிய வரங்களையுந் தந்தருளினன்; அந்த பாணாஸுரனுடைய பெண்ணாகிய உஷையென்பவள், ஒரு நாள் ஒரு புருஷனோடு தான் கூடியதாகக் கனாக்கண்டு, முன் பார்வதி அருளியிருந்தபடி அவனிடத்தில் மிக்க ஆசைபற்றியவளாய்த் தன் உயிர்த்தோழியான சித்ரலேகைக்கு அச்செய்தியைத் தெரிவித்து, அவள் மூலமாய் அந்தப் புருஷன் க்ருஷ்ணனுடைய பௌத்திரனும் ப்ரத்யும்நனது புத்திரனுமாகிய அநிருத்தனென்று அறிந்துகொண்டு, 'அவனைப் பெறுதற்கு உபாயம் செய்யவேண்டும்' என்று அத்தோழியை வேண்ட, அவள் தன் யோகவித்தை மஹிமையினால் த்வாரகைக்குச் சென்று அநிருத்தனைத் தூக்கிக்கொண்டுவந்து அந்தப்புரத்திலே விட, உஷை அவனோடு போகங்களை அநுபவித்துவர, இச்செய்தியைக் காவலாளரா லறிந்த அந்த பாணாஸுரன் தன் சேனையுடன் அநிருத்தனை எதிர்த்து மாயையினாற் பொருது நாகாஸ்த்ரத்தினாற் கட்டிப்போட்டிருக்க, த்வாரகையிலே அநிருத்தனைக் காணாமல் யாதவர்களெல்லாருங் கலங்கியிருந்தபோது, நாரதமாமுனிவனால்

# ஆகாசவாணியில் தெய்விக வாணி

ஆழ்வாராசார்யர்களின் திவ்யவைபவங்களை நமது பத்ராதிபஸ்வாமி ஸாதிக்க ஒலிப்பதிவு செய்துகொண்டு அவ்வப்போது ஒலிபரப்பி அனைவரையும் மகிழ்வித்து வரும் A. I. R. நிலையத்தார் ஆழ்வாராசார்யர்களின் அவதாரபூதரென்றே போற்றத்தக்க நம் ஸ்வாமியை ஸமீபத்தில் பேட்டி கண்டு அதனை 20-7-76 அன்று இரவு 9-30 to 10-00 வரை ஒலிபரப்பினர். அதனைக் கேட்டவர்கள் பலரும் தத்தம மகிழ்ச்சியைக் கடிதமூலம் தெரிவித்து வருகிறார்கள். அவற்றை ஸ்ரீ ராமாநுஜனில் வெளியிடவேணுமென்றும் கோருகிறார்கள். அவை யெல்லாவற்றையும் வெளியிட அவகாச மின்மையால் ஒரு கடிதம்மட்டும் கீழே பிரசுரிக்கலாகிறது. —காரியதரிசி.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீ உ. வே. காஞ்சி பிரதிவாதி பயங்கரம்
அண்ணங்கராசார்ய ஸ்வாமி ஸந்நிதியில்

விஜ்ஞாபனம் உபயகுசலோபரி 21—7—76

நேற்று ராத்ரி சென்னை ஆல் இந்தியா ரேடியோவில் 9-30 மணி முதல் 10-00 மணிவரை செவிக்கினிய செஞ்சொற்களை அமுதமாகப் பொழிந்து அடியோங்களை மகிழ்வித்த தேவரீருக்கு பல்லாண்டு பாடுவதன்றி கைம்மாறு காண்கிலேன். ரேடியோ நிலையத்தார் தமிழ் எழுத்தாளர் திரு. அகிலனை காஞ்சீபுரத்துக்கு அனுப்பி தேவரீரை பேட்டி கண்டு விடைகளை ரிகார்டு செய்து வழக்கமாக சங்கீதக் கச்சேரியோ சங்கீத உபந்நியாசமோ ஒலிபரப்புகிற 9-30—10-30 வேளையில் "மஹா மஹோபாத்யாய ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் வாழ்க்கையும் சாதனைகளும்பற்றி பேட்டிகேளுங்கள்" என்றதுமே ஆவல் மிகுந்தது. சுருக்கமான கேள்விகளும் விளக்கமான விடைகளும் அவை நிறைய ஆழ்வார்களின் அருளிச்செயல்களும் ஆசார்யர்களின் உரை வளங்களும் பளிச்சிட்டபோது மார்கழிமுப்பதும் தப்பாமே ஸ்வாமியின் காலக்ஷேபங் கேட்டோருக்கு பழைய நினைவுகள் வாராமல் போகாது. வித்யாப்யாசம் வேதாத்யயனம் பத்ரலேகனம் ஆகியவை பலருக்கும் தெரிந்திருக்கும். வருங்கால சந்ததிகளுக்கும் வைப்புநிதி போல அனைத்துமொழிகளிலும் ஆயிரம் ஆயிரம் நூல்களை எழுதி அச்சிட்டு அனைத்துலகும் பரப்பி வைத்த பெருமை வாசாமகோசரம். அகிலனின் கடைசி கேள்வியான "இப்போதுஎன்ன எழுதுகிறீர்கள்?"என்றதற்கு ஸ்வாமி அளித்தவிடை மெய் சிலிர்க்கவைக்கிறது. எண்பத்தாறுவது பிராயத்திலும் இருபத்துநாலு பிராயத்து இளைஞரைப்போல குதூகலமும் உற்சாகமும் மிளிர,"எங்கள்ராமாநுஜர் அவதரித்து ஆயிரம் ஆண்டுகள் நிறைவதற்கு இன்னும்நாற்பது வருஷங்கள்இருக்கின்றன. அவர் அவதார வருஷமான பிங்களஹூ சித்திரை திருவாதிரைக்குள் அவருடைய நூல்கள் அத்தனையையும் பாரதநாட்டின் எல்லா பாஷைகளிலும் மொழிபெயர்த்து வெளியிடவேண்டும். அதை நானே செய்கிறேன். அவரவர்கள் தம்மாலான முறையில் ஒத்தாசை பண்ணுங்கள்" என்று சாதித்தபோது அகிலன் கூறியதுபோல் இவையனைத்தும் நிறைவேற்றி இன்னுமொரு நூற்றாண்டிரும் என்றுதான் சொல்லித் தலைக்கட்டத் தோன்றுகிறது. ஆனந்த பரீவாஹத்தினால் ஹர்ஷப்ரணாமங்களை சமர்ப்பிக்கிறேன்.

க்ஷமஸ்வ.

5 21—7—76 பரேலி. தாஸன், *A. T. KRISHNAMACHARI.*

ஸ்ரீ:

# உடையவரின் அவதாரமஹிமை

ஸ்ரீமதுபயவே D. ராமஸ்வாமி ஐயங்கார், அட்வகேட், சென்னை-84.

(ஆவணித் திருவாதிரை)

"நாநாபூதைர் ஜகதி ஸமயைர் நர்மலீலாம் விதித்ஸோ:
அந்த்யம் வர்ணம் ப்ரதயதி விபோராதிமவ்யூஹபேதே,
விச்வம் த்ராதும் விஷயநியதம் வ்யஞ்ஜிதாநுக்ரஹஸ் ஸந்
விஷ்வக்ஸேநோ யதிபதிரபூத் வேத்ரஸாரஸ் த்ரிதண்ட:".

பகவத் பாஷ்யகாரருடைய பெருமை இப்பொழுது விஸ்தாரமாக அனுபவிக்கப்பட்டு வருவதாலே யதிராஜ ஸப்ததி ச்லோகங்களை சேவித்துக்கொண்டு வந்ததில் அவற்றுள் 32வது ச்லோகமான இந்த ச்லோகம் சற்று நூதனமான ரஸவிசேஷங்களைத்தந்து விளங்கியது. அவைகளைப் பெரியோர்கள் திருவடிகளில் பணிந்து இங்கே விண்ணப்பித்துக்கொள்கிறேன்.

உலகத்தில் பல ப்ரகாரங்களான ஸித்தாந்தங்களை விநோதவ்யாபார முறையில் பரவச்செய்யஆசைகொண்ட லோகநாதனுடையஆதிவ்யூஹரூபம் (வாஸுதேவரூபம்) கடைசி வர்ணத்தை ப்ரகடனம் செய்யுங்கால் விஷய சுகத்திலே மண்டிக்கிடக்கும் உலகோர்களைக் காக்கவேண்டிய பொறுப்பு தம்மது என்று கருதி விஷ்வக்ஸேநர் தமது கிருபையை ஆவிஷ்கரித்துக்கொண்டு இங்கே ஸ்ரீபாஷ்யகாரர் வடிவில் அவதரித்தார். அவரது வேத்ரமென்னும் செங்கோலும் த்ரிதண்டமாக வந்தது என்பது இந்த ச்லோகத்தின் திரண்ட பொருள்.

"மதிவிகற்பால் பிணங்கும் சமயம் பலபலவாக்கி"வைத்தவன் ச்ரிய:பதியே தான். அச்சமயங்கள் பலவற்றுள் பீதகவாடைப்பிரானார் பிரமகுருவாகி நின்று "கமப்யாத்யம் குரும் வந்தே"என்ற முதல்ஆசார்யனுடையதாகக் கணக்கிடப்படும் இந்த நம் ஸ்ரீ விசிஷ்டாத்வைத மதம் தவிர, மற்ற மதங்களெல்லாம் சற்று ஏறத்தாழத்தான் இருப்பவை. ஆபாதசூடம் அநபாயியானது இந்த ராமாநுஜ தர்சநம் ஒன்று தான். எம்பெருமான் ப்ரவர்த்திப்பிக்கும் சாஸ்திரங்கள் இருவகைப்பட்டவை யென்று தயாசதகத்தில் அநுபவிக்கப்படுகிறது. தயாதேவியோடு ஸம்பந்தப்பட்டு தயாப்ரேரிதங்களாகச் செய்யப்படும் சாஸ்திரங்கள் ருஜுவானவை. தயையின் ஸாந்நித்யம் குறைந்து லீலாரஸப்ரேரிதங்களான சாஸ்திரங்கள் மோஹன சாஸ்திரங்கள். பௌத்தம் ஸாங்க்யம் போன்ற மதங்களுக்கு வக்தாவாயும், ப்ரேரிதாவாயும் ஸர்வேச்வரனே நின்றபோதிலும் "உனக்கேலும் பிழை பிழையே" என்ற கணக்கில் நம் பூர்வாசார்யர்கள் அவைகளைக் கண்டிக்கக் கூசுவதில்லை. 'இதி மோஹநவர்தமநா த்வயாபி க்ரதிதம் பாஹ்யமதம் த்ருணய மந்யே' [பட்டர், ஸ்ரீரங்கராஜஸ்தவம், உத். சதகம்-16] அம்மதங்களைக் கண்டித்தார்கள் என்பதோடு நில்லாமல் அம்மதங்களை நிறுவியதற்காக எம்பெருமான் பேரில் குறைகூறவும் செய்வார்கள். உலக க்ஷேமத்திலே அவ்வளவு நோக்கு நம்பூர்வாசார்யர்களுக்கு. ப்ரபந்நஜநஸந்தான கூடஸ்தராய் நமக்கெல்லாம் ஆதிகுலபதியாய் விளங்கும் நம்மாழ்வார்

"நின் மாட்டாய மலர் புரையும் திருவுருவம் மனம் வைக்கமாட்டாத பல சமய மதி கொடுத்தாய்......மாஞாலம் வருந்தாதே" என்று பெருமாளிடத்து மனஸ்தாபப்படு கிறார் மூன்றாம்பத்து முதல் திருவாய் மொழியில். அதே மனோபாவத்திலிருந்துதான் ஸ்வாமி தேசிகனிடமிருந்து இந்த யதிராஜஸப்ததிச்லோகமும் அவதரித்திருக்க வேண்டும். நர்மலீலை அதாவது விநோதரஸம், அதிலிருந்து உண்டானவை லீலா ப்ரவ்ருத்தங்களான ஸமயங்கள். அவைகளும் 'நாநா பூதை:'. பல்வகைப்பட்டவை கள். அவைகளைச் செய்துபோருவதில் எம்பெருமானுக்கு ஒருக்கால் இச்சை உண் டாயிருந்தது என்று முதல் பாதத்தால் பேசப்பட்டது.

அதற்குச் சேர காலமும் கலிகாலம் தர்மத்திற்கு மிகுதியான க்லாநி நடை யாடும் காலம். தப்பைத் தப்பாகக்கண்டு நிராகரிக்கச்சக்தியற்று மாந்தர்கள் மயங் கும் காலம். இது, பாஞ்சராத்ர ப்ரதிபாத்யமான ஒரு விஷயத்தைச் சொல்லி, ச்லோகத்தின் இரண்டாம் பாதத்தில் நிர்தேசிக்கப்படுகிறது. வாஸுதேவ, ஸங்கர்ஷண, ப்ரத்யும்ந, அநிருத்தர்கள், என்கிற நான்கு வ்யூஹ மூர்த்திகளுள் முதலாவது வாஸுதேவமூர்த்தி. மேற்சொன்ன "நால்வருக்கும் கிருத த்ரேதாதி யுக பரிவ்ருத்தி க்ரமத்தாலே ஸித, ரக்த, பீத, கிருஷ்ண வர்ணங்கள் மாறிமாறி வரும்" என்று ஸ்ரீமத் தத்வத்ரய சுளகத்தில் ஸ்வாமி தேசிகன் ஸாதித்தருளியபடி வாஸுதேவ ரூபத்துக்குக் கடைசீ வர்ணம் ஸம்பவிப்பது கலியுகத்திலே. ஆகவே, "ஆதிமவ்யூஹபேதே அந்த்யாம் வர்ணம் ப்ரதயதி (ஸதி)" என்பதற்கு கலிகாலமும் வந்தவாறே என்று பொருளாகிறது.

காலமும் கலியாய் ஜகத்தை ரக்ஷிக்கக்கடவ பெருமாளும் மாயாசாஸ்திரங் களைப் பரவச்செய்துவைத்திருக்க, உலகைக் காக்கவேண்டிய பொறுப்பு தம்மது என்றுகொண்டு விஷ்வக்ஸேநர் யதிராஜராக இவ்வுலகில் அவதரித்து, உலகோர் களைத் திருத்திப் பணிகொள்கிறார் என்று ச்லோகத்தின் பிற்பகுதியால் பேசப்படு கிறது. ஏற்கனவே சேதனர்கள் விஷய ப்ரவணர்கள். காலம் கலிகாலம். ஸத் வம் தலையெடுக்க வழியில்லை இவர்களுக்கு ஸ்வாமியான ஸர்வேச்வரனும் இவர் களை மேலும் மேலும் மோஹிப்பித்திருக்கும்போது "விஷய நியதம் விச்வம் த்ராதும் விஷ்வக்ஸேந: வ்யஞ்ஜித அநுக்ரஹஸ்ஸந் யதிபதி: அபூத்", அநுக்ரஹிக்கக் கட மைப்பட்டவன், அநுக்ரஹத்தை அபலபிக்க முற்படவே, இவர் அதை வ்யஞ்ஜநம், வெளிப்படையாகச் செய்யவேண்டிய அவசியம் ஏற்பட்டது. நிரங்குச ஸ்வதந்த்ர னை அரசனால் ஏற்பட்ட ஸங்கடத்தை ஸங்மந்திரிகள் விலக்க வழிதேடுவதுபோல் பெருமாளால் நேரும் துன்பங்களைத் தாமே போக்க முற்படுகிறார் ஸேனைமுதலி யார். "த்வயா நிஸ்ருஷ்டாத்மபரேண" என்றபடி பெருமாள் பரத்தை வஹிக்க வேண்டியவர் இவரேயன்றோ?

ரஸமான இப்பொருள் நிற்க, அதிரஸமான ஸ்வாமி தேசிகன் திருவுள்ளத்தி லநுபவத்துக்கே விஷயமாகக் கூடிய வேறொரு பொருளும் த்வநிக்கிறது. இச்சுலோ கத்தில், வர்ணம் என்கிற சொல் நிறத்தையும்சொல்லும், ஜாதியையும் சொல்லும். அந்த்யம் வர்ணம் என்றபோது கறுப்பு நிறம் என்பதுபோல், கடைசி ஜாதி, அதா வது சூத்ரஜாதியும் சொல்லுக்குப் பொருளாகவேண்டும். அம்முறையில் வர்ண சப் தத்திற்குப் பொருள்கொண்டால் "பெருமாள் நான்காவது வர்ணத்தில் தம்மைப்

ப்ரகாசப்படுத்திக்கொண்டபோது'' என்று பொருளாகவேண்டும். அதாவது பெருமாள் நம்மாழ்வாராக அவதரித்தபோது ''யஸ்யாஸௌ பஜதே கதாசித் அஜஹத் பூமா ஸ்வயம் பூமிகாம்'' என்றும் ''பராங்குச பரகாலாதி ரூபத்தாலே அயிநவமாக ஒரு தசாவதாரம் பண்ணி அநேக தேசிகாபதேசத்தாலே அவதரித்தருளினான்'' என்றும் ஸ்வாமி அருளிச்செய்திருக்கும்படி எம்பெருமானே நம்மாழ்வாராகத் தோன்றியருளினான் என்பது ஸுஸ்பஷ்டம். புத்தராயும், கபிலராயும் தோன்றி லீலாரஸத்துக்குச்சேர அபஸித்தாந்தங்களைச்செய்து வைத்த குறையைப் பரிஹரிக்கப் பெருமாள் தாமே ஆழ்வாராகத் தோன்றியமை இச்சுலோகத்தால் பேசப்படுகிறது.

இப்படிப் பொருள் கொண்டால் ''விச்வம் த்ராதும் விஷய நியதம்'' என்ற சொற்களை 'அந்த்யம் வர்ணம் ப்ரதயதி' என்ற சொற்களோடு அந்வயிக்கக் குறையில்லை. ''முதற்பெருங்கடவுளான விபு'' தன்னைப் பலவகையாகப் பல யோனிகள் பிறந்து காட்டும் முறையில் உலகத்தைக் காக்க வேண்டி நான்காவது வர்ணத்தில் தன்னை ப்ரகாசப்படுத்திக்கொண்டு நின்ற போது, அந்த அவதாரத்தை உலகோர்கள் பயன்படுத்திக்கொள்ளாது போய் விடுவார்களோ என்று அஞ்சி அவர்களிடத்தில் ஆவிஷ்கரிக்கப்பட்ட அநுக்ரஹ புத்தியுடன் விஷ்வக்ஸேநர் உடையவராகத் தோன்றினர் என்று சொல்லப்பட்டதாகிறது. ''பண் தரு மாறன் பசுந்தமிழ் ஆனந்தம் பாய்மதமாய் விண்டிட எங்களிராமானுச முனி வேழம் மெய்ம்மை கொண்ட நல்வேதக் கொழுந்தண்ட மேந்திக் குவலயத்தே மண்டி வந்தேன்றது வாதியர்காள்! உங்கள் வாழ்வற்றதே'' என்கிற அமுதனார் அமுதவாக்கின் படியும், தமிழ் மறைகளாயிரமும் ஈன்ற முதல் தாய் சடகோபன், மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் இராமானுசன் என்கிற தனியன் படியும், ஆழ்வார் செய்த மஹோபகாரத்தைப்பல படிகளிலும் உலகில் பரவச்செய்து மக்கள் அதைக்கொண்டு உஜ்ஜீவிக்கும்படி செய்து போந்த அருள்தொண்டு எம்பெருமானுடையதே யாதலால் அதை இந்தச் ச்லோகத்தால் பாராட்டி ஹ்ருஷ்டராகிறார் ஸ்வாமி தேசிகன் என்று ஏன் சொல்லக்கூடாது? கலிகாலம் என்பதைக் காட்டமட்டுமா அந்த்யம் வர்ணம் ப்ரதயதி விபோ: ஆதிமவ்யூஹபேதே என்று இரண்டாவது பாதத்தை அமைத்திருக்கும் ஸ்வாமி? த்வநிகொண்டு அதிசயப்பொருள் ஒன்றை அதில் புதைத்தவே அப்படிப் பாடியிருக்கவேண்டும். அப்பொருளும் ஆழ்வார் பரமானநற்பொருளாகவே யிருக்கவேண்டும். என்றயோசனையில் இவ்வண்ணம் இங்கே விண்ணப்பித்துக் கொண்டபடி. வாஸுதேவரூபம் கறுப்பு நிறத்தை மேற்கொள்ளும் கலி பிறந்தவுடன் பிறந்தவர் தானே ஆழ்வார்.

''வேத்ரஸார: த்ரிதண்ட:'' என்ற கடைசி சொற்றொடரும் ரஸம். விஷ்வக்ஸேநர் யதிபதியாக அவதரித்தாரென்றால் அவர் திருக்கையிலுள்ள வேத்ரமும் (பிரம்பும்) உடையவர் திருக்கைகளுக்கேற்ற த்ரிதண்டமாக ஆயிற்று. ''ஸாரம்'' என்றால் மரத்தினுடைய வைரம் (வலிவு) நிறைந்தபாகம் என்று பொருள். ஆகவே ஒரு வேத்ரம் மூன்று தண்டமாக மாறக்குறையில்லையே. நித்ய விபூதியில் வேத்ரம் செய்யும் பணியை லீலாவிபூதியில் ஸ்ரீபாஷ்யகாரர் திருக்கையில் த்ரிதண்டம் செய்து போந்தது என்று திருவுள்ளம். வேத்ரமாகிய செங்கோலுக்கு

சிக்ஷையிலும் (உபதேசத்திலும்) அந்வயமுண்டு, சிக்ஷணத்திலும் (தண்டிப்பதிலும்) அந்வயமுண்டு. அதுகொண்டு "யத்வேத்ர சிகரஸ்பந்தே விச்வமேதத் வ்யவஸ்திதம்" என்று முன்னமே இந்த ஸப்ததியில் பாடப்பட்டது. த்ரிதண்டத்துக்கு உபதேசத்தில் மட்டும் தான் உபயோகம் என்பதைத் தெரிவிக்கவே "வேத்ர..." என்று பதப்ரயோகம் விழுந்திருக்கிறது. தண்டனையும் சீர்திருத்தத்தை உத்தேசித்துத் தானுகையால் வேத்ரத்தின ஸாரம்தான் ஸ்வாமி பாஷ்யகாரர் திருக்கையில் விளங்குகிறது என்று அழகாக ஸாதிக்கப்பட்டிருக்கிறது. அஜ்ஞாத நிக்ரஹையான பெரியபிராட்டியாரைப்போல் "தயாஸுதாம்புநிதி" யென்றும் "தயைக தாம்ந:" என்றும் "காரேய் கருணை இராமாநுச" என்றும் "பெரும்பூதூர் வந்தவள்ளல்" என்றும் பாராட்டப்பெற்ற எம்பெருமானாரிடம் நிக்ரஹம் கலசாத அநுக்ரஹமே காணப்படும் என்பதை இதனிலும் அழகாய்ப் பேசமுடியுமோ? ... ... ... ...

---

## கடிதம் (3)

There is an ancient temple of Sri Varadarajaswami (Built by Chola Kings) at (Yogapuri) Vagata Agrahara, P. O. Hoskote Taluk, Bangalore Dt., only 20 miles from Bangalore City.

In this temple Avaranam the Bhashyakar Kainkarya Sabha celebrated the Thiruprathishta Mahothsavam of Utsava and Moola Divya Mangala Vigrahas of Srimath Bhaghavath Ramanuja. Between 14—5—69 and 18-5-69

This was done by Agama Vidvans in the immediate presence of lat. H.H. U Ve Yatindra Pravana Sri Ramanuja Jeeyar Swamigal of Sri Kancheepuram Vadakesari Alagia Manavala Ramanuja Jeeyar Mutt. He did Thirtha Parigraham and also brought with him the Modaliandan from Sri Varadarajaswami Temple of Kanchipuram He also lead the Goshti of Veda, Itihasa Purana recitals and the Nalayira Divya Prabhanda Sevai which was adorned by Asthan Vidvans, Vidyabhushns and Mahopadvayas from Alwar Thirunagari and Thirunarayanapuram at the time of their annual "Thiru Prathishta Mahothsavam, Divyamangala Vigrahas of Manavala Mamunigal Nammalwar and Garudalwar, Thiruprathishta Mahothsavam were celebrated.

The annual Jayanthi of Sri Yatindapravana Ramanuja Jeeyar Swamiji of Kanchipuram Vadakesari Alagia Ramanuja Jeeyar Mutt, Smarakasangha conducted almost a month-long Nityaseva Kainkaryam in memory of this from his first Janmanakshatram, Revathi in Adi month to(18-7-76) II Revathi in Adi (15-8-76). The special nityothsavam included Nitya Tirumanjanam for Acharyas, Alwar Divyamangala Vigrahas, Tirumanjanam and Thiruveedi Uthsavas for Sri Varadarajaswami on five Sundays. Vedic Itahasa Purana recitals and Nalayira Divya Prabhanda Sevas done four times (Sattumurais on four Sundays).

There is a standing threat of Govt's reforms to deprive the Archaka of the lands of and by land reforms the Agrahar's brahmin families lost all lands and there are only three Sri Vaishnava and three other Brahmin families now here A keen need is felt to arrange for Nitya Seva of the Dieties. A Nitya-seva-mandali has been formed to look after this.

B. SRINIVASA IYENGAR (SOTTAI), Organiser.

If un-delivered please return to:
P. B. ANNANGARACHARYA,
KANCHIPURAM. Pin C . -631503

To
Sriman / Srima

153. Sri M. Kannapiran Mudaliar,
31, Mosque Street,
MADRAS – 600015.


Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Sathgrantha Prakasana Sabha.

Printed by R. Devarajan at Sri Kamakshi Press, 44-C, T. K. Nambi St.,
Kancheepuram-3.